# ஸ்ரீவித்யை என்பதென்ன?

ப்ரஹ்மஸ்ரீ கபாலி சாஸ்திரியார்
அவர்களின்
## மஹா மனுஸ்தவம்
முன்னுரை, தமிழாக்கம், குறிப்புகள்:
விஜயா சங்கரநாராயணன்

தீப்தி பப்ளிகேஷன்ஸ்
ஸ்ரீ அரவிந்த ஆசிரமம்
பாண்டிச்சேரி 2

முதற்பதிப்பு: 1987
**விலை: ரூ. 5**

## பொருளடக்கம்



ஆசாரியரின் அடியிணைக்கு

அன்பு என்னும் உணர்ச்சி என்னவென்பதை எனக்கு உணர்த்திய கருணாமூர்த்தியே, நீ எனது வாழ்வில் தலையிட்டிராது போனால் எனது வாழ்வே திசை மாறியிருக்கும். வாழ்க்கையின் உட்பொருள் இன்னதென்று சுட்டிக்காட்டி, இது தான் வழி என்று சொல்லி என்னைத் தடுத்தாட்கொண்ட தேசிகனே, இந்த மொழி பெயர்ப்புப் பணியைச் செய்யுமாறு அருளியது நீ தான். சோம்பிக் கிடந்த என்னை அருவமாக வந்து வந்து எழுப்பினாய். என் கையைப் பிடித்து எழுதுவது போல் இத்தமிழ்ச் செய்யுட்களை எழுத வைத்தாய். இம்மொழி பெயர்ப்பு வேலையைச் செய்கையில் உனது சுவாஸத்தை நான் உணர்ந்தேன்.

வாழ்வையே தவமாகக் கொண்ட உனது ஒப்பற்ற வாழ்க்கையின் பொன்னான நேரத்தை அன்று நீ எனக்காக ஒதுக்கியது உண்டு. வயதின் வக்கிரத்தினால் அன்று நான் அதன் அருமையை உணரவில்லை. இன்று, காலம் கடந்த பின் உணருகிறேன், நீ எனக்கு அளித்தவை என்னவென்பதை. ஆயினும் காலத்தைக் கடந்து நின்று பார்க்கவல்ல நீ இங்கு எங்கேயோ, இந்தப் பூமியின் சுற்றுச் சூழலில் இருந்து எங்களைக் கண்காணிக்கிறாய் என்பது போல் நான் உணருகிறேன். உனது அருளினாலேயே உனது இந்தக் கவிதையை மொழிபெயர்த்தேன். ஆயினும் இந்தக் கருவியின் குறைபாடுகள், அனுபவமின்மை, அவிவேகம் இவை யாவும் மொழிபெயர்ப்பில் பிரதிபலிக்கவே செய்யும். பொறுத்தருள்.

எங்களைப் போன்றோரின் கர்மங்களையெல்லாம் ஏற்றுக் கொண்டதால் பாதங்கள் புண்பட்டுப் போன பெருந்தகையே, உனது அதே பாதங்களில் எனது இந்தக் காணிக்கையை ஒப்படைக்கிறேன்.

## நூலாசிரியர்

மகாமனுஸ்தவம் என்ற இந்த நூலின் ஆசிரியர் பிரம்மஸ்ரீ தி. வி. கபாலி சாஸ்திரியார் ஆவர். இவர் 1886-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 3-ம் தேதியன்று பிறந்தார். பிறந்தது மயிலாப்பூராயினும் இவரது சொந்த ஊர் சென்னையை அடுத்த திருவொற்றியூராகும். இவரது தந்தையின் பெயர் விசுவேசுவர சாஸ்திரி. சிறந்த வடமொழி அறிஞரும் தேவி உபாசகரும் ஆன தந்தையின் மூலம் கபாலி சாஸ்திரியார் மிகச் சிறு வயதிலேயே ஸ்ரீவித்யா உபதேசம் பெற்றார். வேத அத்யயனமும் இளம் வயதிலேயே பழகினர்.

திருவொற்றியூர் ஆலயத்தில் திரிபுரசுந்தரி அம்மனின் சந்நிதியில் நின்று கொண்டு தினமும் ஸ்ரீவித்யா மந்திரத்தை ஜபம் செய்வது இவரது வழக்கம். அந்த ஸ்தலத்தின் தேவதையே இவரது இஷ்டதெய்வம். தமது ஆன்மீக லாபங்களுக்கெல்லாம் காரணம் இந்தத் தேவியின் கருணையே என்பது இவரது நம்பிக்கை. ஏனெனில்—

இவர் வழக்கம் போல் தேவி சந்நிதியில் ஜபம் செய்து கொண்டிருந்த பொழுது தான் ஒரு நாள் காவிய கண்ட கணபதி முனி என்னும் தபஸ்வியைச் சந்தித்தார். சிறு வயது முதல் வேத அத்யயனம் செய்து வந்த சாஸ்திரியாருக்கு வேத மந்திரங்களின் பால் உள்ளூற ஓர் ஈடுபாடு இருந்தது. அம்மந்திரங்களின் பொருள் இவருக்கு ஒருவாறு தெரிந்தாலும் உள்ளத்தில் திருப்தி ஏற்படவில்லை. அவற்றுள் இன்னும் ஏதோ உட்பொருள் மறைந்திருக்க வேண்டும் என்று உணர்ந்தார். ஆனால் இவரது பேரறிவைத் திருப்தி செய்யும் அறிஞர்களின் பரிச்சயம் எதுவும் இவருக்குக் கிட்டவில்லை. எனவே காவிய கண்ட முனிவரைச் சந்தித்ததும் இவரது உள்ளம் உவகை கொண்டது. கணபதி முனிவர் சிறந்த வடமொழிப் புலவர்; மகாகவி; வேத இலக்கியத்தில் பரிச்சயமும் வேத ஆராய்ச்சியில் ஈடுபாடும் கொண்டவர். அவரது அறிமுகம் சாஸ்திரியாருக்குப் பெரும் பயன் தருவதாய் அமைந்தது. காவிய கண்டரின் அருமைச் சீடரானார் இவர். கணபதி முனிவர் மூலமாகவே ஸ்ரீ ரமணமகரிஷியின் நெருக்கமும் இவருக்குக் கிடைத்தது.

சாஸ்திரியாரின் வேத ஆய்வுப் பசி பெரும் பசியாயிருந்தது. மேலும் மேலும் வேதத்தின் பொருளைத் துழாவி வந்த இவர் புதுச்சேரியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'ஆர்யா' என்னும் பத்திரிகையைப் பார்த்தார். அதில் ஸ்ரீ அரவிந்தர் எழுதி வந்த



The Secret of the Veda என்ற கட்டுரைகளில் மனம் பறிகொடுத்தார். தாம் கண்ட உண்மைகளை ஸ்ரீ அரவிந்தரும் குறிப்பிட்டிருந்தது இவருக்குப் பெருவியப்பாயிருந்தது. ஸ்ரீ அரவிந்தரின் பேரறிவும் ஆழ்ந்த ஆத்மானுபவத்தின் மூலம் தாம் கண்டதை உலகிற்கு எடுத்து வழங்கிய அவரது பாங்கும் சாஸ்திரியாரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அந்த மகானை நோக்கி இவர் உள்ளம் ஈர்க்கப்பட்டது. இறுதியில் அவரது நிழலிலேயே, ஸ்ரீ அரவிந்த ஆசிரமத்திலேயே தங்கி ஸ்ரீ அரவிந்தரின் பூரண யோகம் பயிலுவதிலேயே தமது வாழ்நாட்களைக் கழித்தார். இவர் இயற்றிய நூல்கள் யாவும், சித்தாஞ்சனம் என்ற புகழ்பெற்ற ரிக்வேத பாஷ்யம் உட்பட இவரது புதுச்சேரி ஆசிரம வாழ்க்கையின் போது வெளி வந்தவைதாம்.

1953-ம் ஆண்டு ஆகஸ்ட் 16-ம் தேதி இவர் தமது உலக வாழ்க்கையை முடித்துக்கொண்டார். அதற்குச் சில ஆண்டுகட்கு முன்பு தான் இவர் மகாமனுஸ்தவம் என்னும் நூலை இயற்றினர். தமது வாழ்க்கையில் அடுத்தடுத்து நிகழ்ந்த ஆன்மீக அனுபவங்களுக்கெல்லாம் ஆதி காரணமாயிருந்த திரிபுரசுந்தரி தேவியின் பால் சுரந்த நன்றியினால் அந்தத் தேவியின் மேல் துதியாக முப்பத்து இரண்டு சுலோகங்கள் கொண்ட இந்த நூலை எழுதினர்.

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் தாம் இளமை முதல் செய்து வந்த ஸ்ரீவித்யா மந்திரத்தையே இவர் இந்தச் சுலோகங்களில் தொடுத்துள்ளார். மந்திரங்களின் எழுத்துக்களை சுலோகங்களின் முதல் எழுத்துக்களாக அமைப்பது ஒரு மரபு. இதன்படியே பதினைந்து சுலோகங்களின் முதல் எழுத்துக்களாக மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்தையும் அமைத்து விட்டு ஸ்ரீ வித்யையின் மகிமையையும் உட்கருத்தையும் இக்கவிதைகளில் நுட்பமாகக் கூறி முடித்துள்ளார் இவர்.

பராசக்தியின் பால் ஈடுபாடு கொண்டவர்களுக்கும் ஸ்ரீ வித்யா மந்திர உபதேசம் பெற்றவர்களுக்கும் பெரும் பயன் தருவதாய் இந்நூல் அமைந்துள்ளது. ஆன்மீக இலக்கியத்திற்கு இது ஒரு அருங் கொடையாகும் என்றால் மிகையே இல்லை.

## ஸ்ரீ வித்யை என்பதென்ன?

An ear of mind withdrawn from the outward's rhymes
Discovered the seed-sounds of the eternal Word

என்று ஸ்ரீ அரவிந்தபிரான் தமது சாவித்ரி மகாகாவியத்தில் கூறுகிறார். 'புறவுலக ஒலிகளினின்று மீண்டு உண்முகமாய்த் திரும்பிய உள்ளத்தின் செவியானது நித்தியச் சொல்லின் ஒலி விதைகளைக் கண்டு பிடித்தது.' என்கிறார்.

ஆம்; உண்முகமாய் ஆழ்ந்து தவம் செய்யும் ரிஷிகளின் உட்செவிகள் கேட்ட ஒலிகள் தாம் மந்திரங்கள் எல்லாம். தாம் அடைந்த அனுபவத்தைப் பிறரும் அடைய வேண்டும் என்னும் பெருங் கருணையினால் அவர்கள் தாம் கேட்ட ஒலிகளுக்கு, கண்ட உண்மைகளுக்குச் சொல்வடிவம் கொடுத்து உலகிற்கு வழங்கினார்கள்.

இவ்வகையான மந்திரங்களுள் ஒன்று தான் ஸ்ரீவித்யா மந்திரம். 'மந்திரங்களுக்குள்ளே சிறந்தது ஸ்ரீவித்யா மந்திரம்' என்று தந்திர சாஸ்திரம் கூறுகிறது. சக்தி வழிபாட்டைக் குறியாகக் கொண்ட தந்திர சாஸ்திரம் ஸ்ரீவித்யை என்னும் கோட்டைக்குள் எல்லோருமே நுழைந்து விட முடியாது என்கிறது. மிக உன்னத லட்சியம் கொண்ட, உயர்ந்த பண்பாடுடைய உத்தமப் பிறவிகளே இந்த மந்திரத்தை அடையத் தகுதி பெற்றவர்கள். 'ராஜ்யம் தேயம் சிரோ தேயம் ந தேயா ஷோடசாக்ஷரீ' ராஜ்ஜியத்தைக் கொடுத்து விடலாம், தலையையே கொடுக்கலாம்; ஆனால் பதினாறு எழுத்து கொண்டதை (ஸ்ரீவித்யையை) கொடுத்து விடலாகாது என்கிறது தந்திரம். அதாவது அதனுடைய மகிமையை அறியாத மந்த மனிதனுக்கு அதைக் கொடுத்து அந்த மந்திரத்தின் புனிதத்தைக் கெடுப்பது தவறு என்கிறது. இதனாலேயே இம்மந்திரத்தைப் பரம ரகசியமாகப் பாதுகாத்து வந்துள்ளனர்.

பரம்பொருளை சக்தியாக, தாயாக வழிபடும் தந்திர சாஸ்திரம் அந்தப் பராசக்தியை வழிபடுவதற்கு பத்துவகையான மார்க்கங்களை வகுத்திருக்கிறது. பராசக்தியின் கிளைகளான பத்து பிரதான தேவதைகளை நோக்கி அழைத்துச் செல்லும் இம்மார்க்கங்களை தச மகாவித்யைகள் என்பர். இந்த வரிசையில் மூன்றாவதாக வருவது தான் ஸ்ரீவித்யை. இதன் தேவதை மகா த்ரிபுர சுந்தரி எனப்படும் பேரழகு வாய்ந்த, முவ்வுலகிலும் சிறந்த எழில்



தேவதையான அன்னையாவாள். இந்தத் தேவியே லலிதா என்றும் ராஜராஜேசுவரி என்றும் அழைக்கப்படுகிறாள். ஸ்ரீமாதா—அன்னை, ஸ்ரீ மஹா ராஜ்ஞீ—பேரரசி என்று லலிதா ஸஹஸ்ரநாமம் போற்றும் இந்தத் தேவி மானிடர்க்கு மட்டுமல்லாமல் தேவர்களுக்கும் தாயான ஆதிபராசக்தி. வேதம் போற்றும் அதிதி என்பவள் இவளே. ஆரியனை, உன்னதப் பிறவியெடுத்தவனை மேலும் உன்னத நிலைக்கு அழைத்துச் செல்லும் தெய்வத்தலைவி இவள்.

அடையவொண்ணாத உயர் சிகரத்தில் வீற்றிருக்கும் இவ்வன்னைபால் அழைத்துச் செல்லும் சாதனமே ஸ்ரீவித்யா மந்திரம். வித்யா என்றால் அறிவு. ஸ்ரீ என்னும் சொல் புனிதத்தையும் ஐசுவரியத்தையும் குறிக்கும். ஒப்பற்ற இந்த மந்திரத்தை திரு அறிவு என்று மட்டுமே குறிக்கிறது சாஸ்திரம். இது ஒன்றே அறிவு, இதை அறிந்தவன் அனைத்தையும் அறிந்தவனாவான் என்பது தான் இதன் கருத்து.

இந்த மந்திரத்தைப் பெற்றுக் கொண்ட சாதகனுக்கு எல்லா விதக் குறைகளும் அகன்று விடும். ஆரம்ப கட்டத்தில் சாதகன் இதன் மகிமையை முழுவதுமாய் அறிந்து கொள்வது இயலாது. எனினும் இந்த மந்திரத்தின் சக்தியே சாதகனை மெல்ல மெல்ல நடத்திச் செல்லும். அப்போது அவன் படிப்படியாக இதன் மகிமைகளை உணரலாவான். கல்விக்குத் தாயான சரஸ்வதியின் கடாட்சம் இவனை நோக்கி வரும். எங்கும் நிலையாக நில்லாமல் சென்று கொண்டேயிருக்கும் செல்வத்தின் தலைவி லக்ஷ்மியும் கூட இவனிடம் நிலையாகத் தங்குவாள். அதாவது கல்வியும் செல்வமும் இவனைத் தேடி வந்தடையும். சாதனையில் மேலும் மேலும் முன்னேறுகையில் பல சித்திகளையும் சாதகன் பெறுவான். ஆத்ம சாதனையின் ஓர் அங்கமாக குண்டலினி சக்தி விழிப்புற்று பல அற்புதங்களை நிகழ்த்தும். உள்ளும் புறமுமாகச் சாதகனை ஒளிவெள்ளம் சூழ்ந்து கொள்ளும். சேயின் விருப்பமறிந்த தாய் இவனது குறைகளையெல்லாம் நீக்கவே காத்திருக்கிறாள். ஆகையால் சாதகன் தனது விருப்பத்தைப் பற்றிக் கவலைப்படாமல் நடுவில் காணும் விந்தைகளில் மயங்கி நின்று விடாமல் அனைத்தையும் அன்னையிடமே ஒப்படைக்கும் பொழுது அவள் இவனுக்கு எது தேவையோ அதை அளித்து எதனால் இவன் துன்புறுவானோ அதனை நீக்கி இறுதியில் தனது அன்பு வலையில் இவனைப் பிடித்திழுத்து தன் எல்லையற்ற சாம்ராஜ்ஜியத்தின் ஓர் அங்கமாக இவனை ஏற்றுக் கொண்டு விடுவாள்.

இத்தனையையும் செய்யும் இந்த மந்திரம் தான் என்ன? நாம் முன்பே கூறியது போல் மந்திரம் என்பது வெறும் சொற்களால் ஆன ஒரு வாக்கியமோ சொற்றொடரோ அல்ல. தான் உலகில் வெளிப்பட வேண்டும், தனது எல்லையற்ற தன்மையை ஓர் எல்லைக்குட்படுத்திக் கொண்டு ஒரு வடிவம் பெற வேண்டும் என்று இறைவன் விரும்பும் பொழுது அகண்ட வெளியில் ஒரு சலனம் ஏற்படுகிறது. இந்தச் சலனத்திற்கு ஓர் ஒலி உண்டாகிறது. இந்த ஒலியே ஒரு வடிவம் பெறுகிறது. உன்னத மனநிலையைப் பெற்ற ஞானிகள் தங்கள் உட்செவியால் இந்த ஒலியைக் கேட்கிறார்கள். தங்கள் அகக் கண்ணால் இந்த ஒலியின் வடிவத்தைக் காண்கிறார்கள். இதனுடைய பொருளை நன்குணர்ந்த அந்த ரிஷிகள் பொய்யறியாத தங்களுடைய நாவினால் அந்த ஒலிக்குச் சொல் வடிவம் தருகிறார்கள். மந்திரம் என்பது இதுவே.

இனி, ஸ்ரீவித்யா மந்திரம் என்பதென்ன? பராசக்தியின் அங்கங்கள், வடிவங்கள் பலப்பலவாகும். பிரபஞ்சத்தின் பல்வேறு தொழில்களை செயல்படுத்துவதற்காக பரம்பொருள் தனது சக்தியின் பல பிரிவுகளை இயக்குகின்றது. இவற்றுள் ஸ்ரீவித்யா உபாசகர்கள் அறிந்து கொள்ள வேண்டிய முக்கியமான சக்திகள் மூன்று. பாலா, மந்த்ரிணீ, தண்டநாதா என்பவை அவை.

பாலா—இறைவனைக் குழந்தையாக வழிபடுவது ஆத்ம சாதனையிலே ஒரு மரபு. எட்டமுடியாத பரம்பொருளை கைக்கெட்டிய குழந்தையாக பாவித்துச் சீராட்டிக் குலவுவதன் மூலம் உணர்ச்சி மேலீட்டினால் அப்பரம்பொருளை எட்டிவிடுவது எளிதாகும் என்பதே இதன் தத்துவம். கண்ணனையும் கந்தனையும் குழந்தைகளாக வழிபடுவது போல் பராசக்தியை, திரிபுரசுந்தரியை குழந்தையாக வழிபடுவது உண்டு. இக்குழந்தையை பாலா த்ரிபுர சுந்தரி என்றழைப்பர். பாலா த்ரிபுர சுந்தரியின் மந்திரம் மூன்றெழுத்துப் பெறும். ஐம் க்லீம் ஸௌஹ் என்பவை இவை. இவையே ஸ்ரீவித்யா மந்திரத்தில் மூன்று பிரிவுகளாக விரிவாகியுள்ளன. எடுத்தவுடன் ஸ்ரீவித்யையை அணுக முடியாதவர்கள் ஆரம்பத்தில் பாலா மந்திர உபதேசம் பெறுவார்கள். இந்த மந்திரத்தில் நன்கு ஈடுபட்ட சாதகன் ஸ்ரீவித்யா மந்திரத்தைப் பெறச் சித்தமாகிறான். த்ரிபுர சுந்தரியின் அம்சங்கள் அனைத்துமே பாலாவினிடமும் அமைந்திருப்பதால் குழந்தையைக் கண்ட சாதகன் அன்னையையும் இறுதியில் அடைவது சாத்தியமாகிறது.

மந்த்ரிணீ—மந்திரிணி என்னும் தேவி ராஜராஜேசுவரியின், திரிபுர சுந்தரியின் மந்திரியாவாள். பராசக்தியின் அந்தரங்க ஆலோசகியான இந்தத் தேவியே தச மகாவித்யைகளுள் மாதங்கி



என்று அழைக்கப் படுவாள். கருநிறம் கொண்ட இந்தத் தேவியை சியாமளா என்றும் ராஜசியாமளா என்றும் அழைப்பர். தனது திறமையையும் கூர்மதியையும் சாதகனுக்கு வழங்கும் இத்தேவியை உபாசிப்பவன் கடைசியில் ஸ்ரீவித்யா உபாசகனாகத் தகுதி பெறுகிறான்.

தண்டநாதா—இந்தத் தேவி ராஜராஜேசுவரியின் தளபதியாவாள். அன்னையின் படைபலமாக விளங்குபவள். வாராஹீ என்றழைக்கப்படும் இந்தத் தேவி அசுத்தங்கள் அனைத்தையும், தீமைகள் யாவற்றையும் கபளீகரம் செய்பவள். சாதகனின் வழியில் உண்டாகும் இடர்களையும் தீயசக்திகளையும் விழுங்கி விடுபவள். தண்டம் என்றால் கோல் என்று பொருள். இந்தத் தேவி தனது கையில் வைத்திருக்கும் கோலினால் எதிர்ச் சக்திகள் அனைத்தையும் செயலிழந்து ஸ்தம்பித்துப் போகச் செய்பவள். எனவே இவளை ஸர்வ ஸ்தம்பனகரீ என்பர். தச மகாவித்யைகளுள் பகளாமுகீ என்றழைக்கப்படும் இந்தத் தேவியை வழிப்பட்டால் ஸ்ரீவித்யையை அணுகுவது மிகவும் எளிதாகிறது.

இவை மூன்றும் அன்னையின் மூன்று முக்கிய அம்சங்களாகும். நேரிடையாக அன்னையையே, ஸ்ரீவித்யையையே அடையக் கூடியவர்களுக்கு இந்தத் தேவியர் தாமாகவே முன்வந்து தமது வல்லமைகளை வழங்குவார்கள்.

ஸ்ரீவித்யா மந்திரத்தை முதன்முதலாக வழிபட்டவர்கள் பன்னிரண்டு பேர் என்கிறது தந்திர சாஸ்த்திரம். மனு, சந்திரன், குபேரன், லோபா முத்ரை, மன்மதன், அகஸ்தியர், நந்திகேசன், சூர்யன், விஷ்ணு, ஸ்கந்தன், சிவன், துர்வாசர் என்று இவர்கள் எல்லாம் முதன்முதலாக ஸ்ரீ வித்யையை அணுகியவர்கள். இவர்களுள் மனிதர்களும் சித்தர்களும் தேவர்களும் அடங்கியிருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் ஒவ்வொருவருமே ஸ்ரீவித்யைக்கு ஒவ்வொரு தனிப் பாணியை, வழிமுறையை வகுத்தனர். அந்தந்தப் பாணிகளுக்கேற்ப ஸ்ரீவித்யா மந்திரம் வேறுபட்டு விளங்குகிறது. இவற்றுள் இன்று பலரும் கடைப்பிடிப்பது இருவகை வழி முறைகளாகும். மன்மதனும் அகஸ்தியரும் வகுத்த முறைகளே இன்று பெரும்பாலும் பின்பற்றப்படுகின்றன. மன்மதன் அல்லது காமராஜன் வகுத்த முறையை காதி வித்யா என்கின்றனர். க என்னும் எழுத்தை முதலாகக் கொண்டு துவங்குவதால் இப்பெயர் பெற்றது அது. அகஸ்தியரின் வழிமுறை ஹாதி வித்யா என்று அழைக்கப்படுகிறது. ஹ என்னும் எழுத்தை முதலாகக் கொண்டு ஆரம்பிப்பதால் இதனை இவ்வாறு அழைக்கின்றனர். ஹாதி வித்யையில் அட்சரங்கள் ஐந்தும் காதியில் ஏழு

அட்சரங்களும் உள்ளன. மந்திரத்தில் ஒரு முறைக்கு மேல் வரும் அட்சரங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. இந்த இரண்டு வித்யைகளில் எது சிறந்தது எனில் இரண்டுமே ஒன்றுக்கொன்று தாழ்ந்தது இல்லை; இரண்டுமே பயனளிக்கும் ஆற்றல் பெற்றவை தான் என்கிறது தந்திர சாஸ்திரம். அன்னையின் சக்தி ஐந்தெழுத்தின் மூலமும் ஏழெழுத்தின் மூலமும் ஒரே மாதிரி சாதகனுள்ளே நாத கலை யுருவில் பிரவகிக்கின்றது.

அன்பின் தெய்வமான மன்மதன் அல்லது காமராஜனால் வகுக்கப்பட்ட காதி வித்யையின் மூலம் அன்னையின் பேரன்புத் தத்துவம் கிட்டுவதால் காதி வித்யையே இன்று பெரும்பாலும் வழக்கில் உள்ளது. 'சிவபிரான் மன்மதனை எரித்த பொழுது மன்மதனின் உடல் சாம்பலாகியது. அந்தச் சாம்பற்குவியலை விளையாட்டுப் போக்காக ஒன்று சேர்த்துக் குவித்து அதற்கு உயிர் கொடுத்தானாம் ஒரு கந்தர்வன். அதுவே பண்டாசுரனாக உருவெடுத்ததாம். இறைவனின் கோபத்திற்காளாகி தெய்வ மார்க்கத்திற்குப் புறம்பாக உருவானதால் இந்தப் படைப்பு ஓர் அசுரனாகியது. அன்பை வக்கிரமான கோணத்தில் காட்டும் இந்தப் படைப்பு அசுரசக்தியாகியது. அன்பை வக்கிரமாக்கும் இந்த பண்டாசுரனை அழித்து பிரபஞ்சத்தில் உண்மையான தூய அன்பை நிலைநாட்டுவதற்காக அன்பே உருவான, அருளே வடிவான அன்னை லலிதாதேவி திருவுள்ளம் கொண்டு அந்த அசுரனைப் போரில் தோற்கடித்தாள்' என்று பிரம்மாண்ட புராணம் விவரிக்கின்றது. உலகில் நிலவியுள்ள வக்கிரமான உணர்ச்சிகளை ஒழுங்கு படுத்தி அன்பின் உயர்வையும் தூய்மையையும் சாதகனுக்கு, உணர்த்த உதவுவதுதான் அன்னையின் மந்திரத்தின் நோக்கம் என்பதே கருத்து.

காதி வித்யையில் ஒருமுறைக்கு மேலும் வரும் எழுத்துக்களையெல்லாம் கணக்கில் எடுத்தால் பதினைந்து அட்சரமாகிறது. அதனால் இதனை பஞ்சதசீ என்று கூறுவர். பஞ்சதசம் என்றால் வடமொழியில் பதினைந்து என்று பொருள். இந்தப் பதினைந்து எழுத்துக்களை முதல் அட்சரமாகக் கொண்டு எழுதப்பட்டது லலிதாத்ரிசதீ என்னும் தோத்திரம். இந்த மரபை யொட்டியே கபாலி சாஸ்திரியாரும் மஹாமனுஸ்தவம் என்ற துதியைப் பாடினர்.

பஞ்சதசியாகிய இம்மந்திரத்தைக் கண்ட ரிஷி, அதாவது மந்திர த்ரஷ்டா முனிவர்க்கெல்லாம் மன்னனாய் விளங்கும் தக்ஷிணாமூர்த்தியே என்பர். இதன் சந்தம் பங்க்தி எனப்படும். இதன் தேவதை லலிதா த்ரிபுர சுந்தரி ஆவாள்.



இப்புனித மந்திரம் இதுவே—

'கஏஈலஹ்ரீம் ஹஸகஹலஹ்ரீம் ஸகலஹ்ரீம்'

இம்மந்திரம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப் படுகின்றது. இதனை மூன்று கண்டங்கள் அல்லது மூன்று கூடங்கள் (சிகரங்கள்) என்று கூறுவார்கள்.

ஐந்து எழுத்துக்களை உடைய முதற் கூடத்தை வாக்பவ கூடம் என்பர். பிரபஞ்சத்தின் ஆதிமூலமான சொல்லிலிருந்து, வாக்கிலிருந்து பிறந்தது இது. இரண்டாவது கண்டம் ஆறு அட்சரங்களை உடையது. இதனை காமராஜ கூடம் என்பர். அன்பின் தேவதையான காமராஜனை ஒட்டியது இது. மூன்றாவதும் இறுதியானதும் ஆகிய பகுதி சக்தி கூடம் என்று சொல்லப்படுகிறது.

சிருஷ்டியின் ஆரம்பத்தில் அகண்டத்தில் ஓர் அதிர்வு உண்டாகியது. அதுவே நாதம். அது செயல்பட, இயங்க, ஓர் உந்துதல்—தூண்டுதல்—ஓர் இச்சை அதாவது காமம் தேவைப்பட்டது. பின்னர் சிருஷ்டி முழுமை பெற ஒரு சக்தி அவசியமாகியது. இந்த மூன்று தத்துவங்களையே ஸ்ரீவித்யா மந்திரத்தின் மூன்று பகுதிகள் குறிக்கின்றன. இதனைப் பயிலும் சாதகனுக்கு இச்சிருஷ்டியின் தத்துவம் உணர்த்தப்படுகின்றது. இம்மந்திரத்தின் முதல் எழுத்தான க என்னும் அட்சரம் பிரம்மா, சரஸ்வதி ஆகிய இருவரின் பீஜாக்ஷரமாகும். இந்த எழுத்து உலகத்தை உருவாக்கிய முதல் ஒலிச்சேர்க்கையை, 'வாக்'கைக் குறிக்கின்றது. இந்த 'வாக்'கின் சொல்லுருவமாக வெளிப்பட்ட மந்திரத்தை சாதனை செய்பவன் அறிவின் முழுமையான பயனைப் பெறுகிறான். இம்மந்திரத்தில் அடங்கிய ஞானம் முழுவதும் அவனுக்குத் தெள்ளென விளங்கி விடுகின்றது.

படைப்புத் தொழிலுக்காக, ஒளிகளுக்கெல்லாம் மூலமாகிய பேரொளியானது தன்னை மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டது. சந்திரன், சூரியன், அக்னி என்பவையே அவை. ஸ்ரீவித்யா மந்திரத்தின் மூன்று பகுதிகளும் முறையே ஸோமகண்டம், சூர்ய கண்டம், அக்னி கண்டம் என்று வழங்கப்படுகிறது. இந்த மூன்று பகுதிகளையும் ஆளும் தேவதைகளை முறையே காமேசுவரி, பகமாலினி, வஜ்ரேசுவரி என்பர். இம்மூன்று தேவதைகளும் தான் ஸ்ரீ சக்ரத்தின் முதல் முக்கோணமான யோனியில் இடம் பெற்றுள்ளனர். மனித உடலில் ஸோம கண்டம் என்பது ஸஹஸ்ராரம் என்னும் தலை மையமாகவும் சூர்ய கண்டம் அனாஹதமாகிய இதய மையமாகவும் அக்னி கண்டம் மூலாதாரமாகிய அடி

மையமாகவும் பிரதிபலிக்கின்றன. சாதகன் இவ்வாறு தனது உடலை மந்திரத்தோடு ஒன்றுபடுத்திக் கொள்ளுகிறுன்.

மந்திரமும் அதன் தேவதையும் வேறல்ல. மந்திரமே தேவதையின் உடல் ஆகும். எனவே ஸ்ரீவித்யா மந்திரம் அன்னையின் சரீரமே ஆகும். இதனுடைய பகுதிகளும் அன்னையின் உடலின் பகுதிகளே ஆகும். முதற் பகுதியான வாக்பவ கூடம் அன்னையின் முகமாகவும் இரண்டாவது பகுதியான காமராஜகூடம் அவளின் மத்திய பாகமாகவும் மூன்ருவது பகுதியான சக்தி கூடம் அடிப் பாகமாகவும் கருதப்படுகின்றன.

மந்திரத்தைக் கவனமாகப் பார்க்கும் பொழுது இம்மூன்று பகுதிகளும் ஹ்ரீம் என்னும் எழுத்தில் முடிவுறுவது தெரிய வரும். ஹ்ரீம் என்னும் அட்சரம் தந்திர சாஸ்திரத்தில் பிரணவமாகக் கருதப்படுகிறது. வேதத்தில் ஓம் என்னும் எழுத்துக்குரிய மதிப்பை தந்திர சாஸ்திரத்தில் ஹ்ரீம் என்னும் எழுத்து பெறுகிறது. இதனை மாயா என்றும் குறிப்பர். மா என்னும் சொல் வடமொழியில் அளத்தல் என்று பொருள்படும். எனவே மாயா என்ருல் அளவு என்ருகிறது. அளப்பரிய ஆற்றல் ஓர் அளவுக்குட்படுவதே மாயை. அதுவே புவனேசுவரியின், உலகத்தின் முழுமுதற் தலைவியான அன்னையின் திவ்விய நாமமாகும். உலகத்தை உருவாக்கி அதனுள் தானே நுழைந்து கொண்டிருக்கும் பராசக்தியின் திருப்பெயரே அது. தச மகாவித்யைகளுள் ஒருவளான புவனேசுவரியின் மந்திரமே ஹ்ரீம் என்பதாகும். இந்த உலகத்தை விரித்தலையும் பின்பு சுருட்டி மடக்கி விடுவதையுமே தொழிலாகக் கொண்ட அன்னையின் ஓரெழுத்து மந்திரமே ஹ்ரீம் என்பது. இந்த மந்திரத்தை லஜ்ஜா பீஜம் என்றும் அழைப்பர். லஜ்ஜா என்ருல் நாணம் என்று பொருள். நாணம் என்ருல் சுருங்குதல் ஆகும். அதாவது இன்னும் முழுவதும் வெளிப்படாமல் குறுகி மறைந்திருத்தல் ஆகும். இவ்வாறு லஜ்ஜா பீஜமாகிய ஹ்ரீம் என்னும் மந்திரம் இன்னும் பூரணமாக வெளிப்படாமலிருக்கும் சிருஷ்டியைக் குறிக்கின்றது. ஹ்ரீம் என்னும் ஒலி படைப்பாற்றல் முழுவதையும் தன்னுள் கொண்டது. இதனை ஆரம்பமாகக் கொண்டே சிருஷ்டி துவங்கியது. இதனைச் சாதனமாகக் கொண்டு தான் அன்னை அண்டவெளியில் பிரபஞ்சத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறுள். மனிதனின் இதயத்திலும் அதுவே ஹ்ருல்லேகையாக, அதாவது இதயத்தின் ஒளிக்கதிராக இழையோடுகிறது.

தெய்வம் பிரபஞ்சத்தைப் படைக்க ஆவல் கொண்டது. அது போலவே பிரபஞ்சமும் தெய்வத்தை அடைய ஆவல் கொண்டது. தன்னைப் படைத்த தாயை அடையத் துடிக்கும்



சேயின் ஆர்வம் போன்றே உலகம் தனது படைப்பாளியை அடைய ஏங்குகின்றது. தெய்வத்தின் இச்சையானது காமகலையாக ஆகாயத்தில் வேர்கொண்டு பூமியில் தனது கிளைகளைப் பரப்பி விரிந்துள்ளது. இந்த இச்சைக்குப் பிரதிபலிப்பாக இங்கிருந்து, மனித இதயத்திலிருந்து ஹ்ருல்லேகையாக ஆர்வக்கனலின் கதிர் புறப்பட்டுத் தனது மூலஸ்தானத்தை அடைய ஏகுகிறது. இவ்வாறு சிருஷ்டியையும் அதன் கர்த்தாவையும் இணைப்பது ஹ்ரீம் என்னும் ஒலி.

இனி, ஸ்ரீவித்யா மந்திரத்தில் மூன்று பகுதிகள் இருப்பதையும் இம்மூன்று பகுதிகளும் ஹ்ரீம் என்னும் அட்சரத்தில் முடிவுறுவதையும் கண்டோம். இம்மந்திரத்தைப் பயிலும் சாதகனுக்கு இம்மூன்று பகுதிகளும் முவ்வகை ஞானத்தை நல்குகிறது. அவை யாவை? உலகம், கடவுள், ஆன்மா ஆகியவற்றின் சேர்க்கையே இந்தப் படைப்பு. உலகத்தை அதன் வெளிப் படையான தோற்றத்தைக் கண்டு அறிவது பூரண அறிவாகாது. உலகம் இறைவனின் தோற்றமே ஆகும் என்பதை உணருவதே உண்மை அறிவு. இந்த அறிவை அனுபவ பூர்வமாக சாதகனுக்குக் கொடுக்கிறது மந்திரத்தின் முதற் பகுதியிலுள்ள ஹ்ரீம். இரண்டாவது ஹ்ரீம் அந்த அறிவை மேலும் விரிவாக்கி கடவுளையும் இந்த உலகத்தையும் உணர்த்துகிறது. இந்த உலகத்திற்கு மூலவேராக கடவுள் இருப்பதை அனுபவித்துணர வகை செய்கிறது. மூன்ருவது ஹ்ரீம் ஆன்மாவைப் பற்றிய தத்துவ ஞானத்தை அளித்து கடவுள் ஒவ்வொரு உயிரிலும் ஆன்மாவாக விளங்குவதையும் இந்த உலகமே கடவுளின் உடலாக விளங்குவதையும் அறிவுறுத்துகின்றது. இவ்வாறு இம்மந்திரத்தைப் பயிலும் சாதகன் உலகம், கடவுள், ஆன்மா ஆகியவற்றின் தத்துவங்களைப் பற்றிய பூரண ஞானத்தைப் பெறுகிறுன்.

இத்தகைய சக்தி யடங்கியதே ஸ்ரீவித்யா மந்திரம். மந்திரம் மிகவும் மகத்தானது. அதனுடைய மகிமையை அறிந்து பயிலும் சாதகனுக்கே அதன் முழுப்பயனும் கிட்டும். மந்திரத்தை வெறும் அட்சரங்களாகப் படிப்பவனுக்கும் இயந்திரகதியில் வெறும் ஒலியாக உச்சரிப்பவனுக்கும் மந்திரத்திஞல் எவ்விதப் பயனும் இல்லை.

கற்கண்டைக் கண்ணுல் பார்த்ததனுலோ அல்லது அதன் பெயரை நாவினுல் உச்சரித்ததனுலோ அதன் இனிமையை எவரும் சுவைத்து விடுவதில்லை. கற்கண்டையே மென்று சுவைக்கும் பொழுதுதான் அதன் இனிமையை அனுபவிக்க முடியும். மந்திரத்தின் உட்கருத்தை ஆழமாக உணர்ந்து அதனுள் பிரவேசிக்கும் பொழுது தான் அதனுடைய முழுப்பயனும் கிட்டும்.

குருவின் தேவை

ஆன்ம வழியில் செல்வதற்கு மந்திரத்தின் துணை அவசியம் என்பதைக்கண்டோம். இந்த மந்திரத்தை எங்கிருந்து பெறுவது? புத்தகங்களில் படிக்கக் கிடைக்கும் மந்திரங்கள் உண்மைச் சாதக னுக்கு எவ்விதப் பயனையும் நல்கா. புத்தகத்தில் மருந்துகளின் பெயரைப் படிப்பது போன்றதே அதுவும். உயிரற்ற புத்தகம் உறுதுணை ஆகாது. மந்திரத்தின் ஒலியும் உச்சரிப்பும் அதனுடைய உட்பொருளும் தெரிந்த ஒருவர் மூலம் மந்திரத்தைக் கற்பதுதான் சிறந்தது. இதற்கு உரிய வழிகாட்டி யார் என்பதைத் தேடுவது மிக அவசியம்.

ஒரு நோயாளி மற்றொரு நோயாளியைக் குணப்படுத்திவிட முடியாது. ஒரு தரித்திரனால் மற்றொரு தரித்திரனின் வறுமை யைப் போக்க இயலாது. திடகாத்திரனும் நோயை நீக்கும் வழி யறிந்தவனுமே நோயாளியைக் கடைத் தேற்றுவான். பணம் படைத்தவனும் பணத்தைப் படைக்கத் தெரிந்தவனுமே ஒரு ஏழைக்கு உதவ முடியும்.

ஆன்ம வழியில் செல்ல ஆர்வம் கொண்டவன் தன்னிலும் உயர்வான ஒரு வழிகாட்டியைத் தேட வேண்டும். பற்றும் பார பட்சமும் இல்லாமல் தனக்கு எவ்விதப் பயனும் கருதாது என்றும் மேல் நிலையில் நிலைத்து நிற்கும் ஒருவர் ஒருவனைச் சீடனாக ஏற்றுக் கொள்ள முன் வருவாரானால் அது அந்தச் சாதகனின் பெரும் பேறாகும். அவனுக்கு உரிய மந்திரம் எது என்பதை அந்த மகானே அறிவார். மந்திரம் என்பது வெறும் சொல்லடுக்கு அல்ல. உரிய வர்கள் உச்சரிக்கும் பொழுது அம்மந்திரத்தின் தத்துவம் உயிர் பெற்று எழும். ஒரு மந்திரத்தை ஆழ்ந்த நம்பிக்கையுடனும் பூரண உணர்வுடனும் வாழ்நாள் முழுவதும் சாதனை செய்தவர் அதனுடைய சித்தியைப் பெற்றிருப்பார். இத்தகைய மகானை அணுகி அவரது உள்ளம் குளிருமாறு தொண்டு செய்து, பொறுமையுடன் காத்திருந்து உரிய தருணத்தில் அவர் தரும் மந்திரத்தைப் பெற்றுக் கொள்வதே சாதகனுக்கு நன்மை பயக் கும். அதுவல்லாமல் வெறும் புத்தகத்தைப் படித்து விட்டு ஆத்ம சாதனையைத் துவக்குவது விழலுக்கு இறைத்த நீரே ஆகும்.

மந்திர சித்தி பெற்ற மகானை அறிந்து கொள்வது எப்படி? போலிகள் மலிந்து விட்ட இந்நாட்களில் உண்மை மகானைக் கண்டறிவது மிகக் கடினமே. எனினும் ஒன்றை உணர வேண்டும்; உயர்ந்த வஸ்துக்கள் என்றுமே எளிதில் கிட்டி விடுவதில்லை. எளிதில்



கைக்கெட்டுபவை பெரும்பாலும் மலிந்த சரக்காகவே இருக்கும். சாதகனுக்குப் போதிய ஆர்வமும் நல்ல குருவை வேண்டி எழும் தீவிர ஏக்கமும் தாபமும் உண்டாகுமானால் உரிய தருணத்தில் குருவின் பரிச்சயம் அவனுக்குக் கிடைக்கும். ஆன்மீக வாழ்க்கை யில் தீவிர ஈடுபாடு கொண்டவனுக்கு, ஆன்மீகம் தவிர வாழ்க் கையில் மற்ற எதையுமே இரண்டாம் பட்சமாக நினைப்பவனுக்கு, அல்லும் பகலும் தெய்வமொன்றே சிந்தனையாக இருப்பவனுக்கு உண்மையான குரு நிச்சயம் கிடைப்பார். சத்தியத்தை நாடும் உள்ளம் சத்தியமான மனிதரை உடனே அடையாளம் கண்டு கொள்ளும். அப்படிக் கிடைத்த குருவைப் பணிந்து வணங்கி தொண்டு செய்வதால் சாதகனின் மனம் பண்பட்டு குருவின் அருளுக்கு சித்தமாகும். குருவின் அருட்புனல் அவன் உள்ளத்தில் பாய உரிய தருணத்தில் அவர் தமது சீடனில் மந்திரத்தை விதைப் பார். மந்திரத்தின் முழுப் பொருளையும் உணர்ந்து சித்தி பெற்ற அம்மகானிடம் அந்த மந்திரத்தின் சக்தி முழுவதும் ததும்பிக் கொண்டிருக்கும். இதனை நன்கறிந்து கொண்டு சீடன் உள்ளார்ந்த நம்பிக்கையோடு அவர் அளிக்கும் மந்திரத்தை ஏற்றுக் கொண்டு நியமத்துடன் அதைப் பயின்று வந்தால் அவர் விதைத்த அந்த மந்திரமானது தளிர் விட்டுக் கிளைத்துப் பயன் தரும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. உண்மையான பக்தன் என்றுமே நலிவ டைவதில்லை.

## நன்றி

நான் முதன் முதலாகத் தெரிவிக்க வேண்டிய நன்றி திரு. எம். ஸி. சுப்பிரமணியம் அவர்களுக்கே உரியது. பள்ளி நாட்களில் ஸ்ரீ கபாலி சாஸ்திரியாரின் மாணவராக இருந்து பின்னர் அவரது நெருங்கிய சீடராகிய திரு. எம்.ஸி.சு. தான் என்னை மகாமனுஸ்தவத்தைத் தமிழில் மொழிபெயர்க்குமாறு தூண்டியவர். எனவே இந்நூலுக்குப் பொறுப்பானவரும் அவரே.

மற்றும், எனது இத்தமிழ் நூலுக்குப் பெரும்பாலும் ஆதாரமாயிருந்தது எனது கணவர் திரு. எஸ். சங்கரநாராயணன் அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பான Quintessence of Sri Vidya என்னும் நூலே ஆகும். எனவே நான் அவருக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளேன்.

இன்னும் நான் மனநிம்மதியுடன் உட்கார்ந்து எழுதத் தகுந்த சூழ்நிலையை உருவாக்கித்தந்த என் குடும்பத்தினர் அனைவருக்குமே நான் நன்றி செலுத்துகிறேன்.

இப்புத்தகத்தை வெளியிட்டு, சாஸ்தியாருக்குத் தொண்டாற்றும் வாய்ப்பை என்க்களித்த தீப்தி பப்ளிகேஷன்ஸாருக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

புத்தகத்தை அழகுற அச்சிட்ட ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸாருக்கும் எனது ஆழ்ந்த நன்றி உரித்தாகும்.

**விஜயா சங்கரநாராயணன்**

## महामनुस्तवः

आर्यां मातरमाद्यां
त्रिभुवनसन्तानयोगसौभाग्याम् ।
आदिपुरेश्वरमहिषीं
ललितां श्रीत्रिपुरसुन्दरीं वन्दे ॥ १ ॥

1. ஆர்யாம் மாதரமாத்யாம்
த்ரிபுவன ஸந்தான யோக ஸௌபாக்யாம்
ஆதிபுரேச்வர மஹிஷீம்
லலிதாம் ஸ்ரீத்ரிபுர ஸுந்தரீம் வந்தே

1. ஆரியை ஆதியன்னை புவனம் மூன்றையு
மீன்ற பேறு டையாள் ஆதிபுரத்
தலைவன் தேவி திரிபுர சுந்தரிதன்
பொன்ன டிபோற் றிவணங் கிடுவோம்

மூன்று உலகங்களையும் சந்தானமாக, மக்கட் செல்வமாகப் பெற்ற சௌபாக்கியமுடைய தாய்; இந்தப் படைப்பெல்லாம் தோன்று முன்னரே இருந்து வரும் ஆதிசக்தி; ஆதிபுரம் எனப்படும் திருவொற்றியூர் ஈசனின் மகிஷியாம் இந்த லலிதா திரிபுர சுந்தரியை வணங்குவோம் என்கிறார் கவி. ஆர்யா என்றால் பண்பனைத்திற்கும் உறைவிடமாகிய உயர் குடிப்பிறப்பினள் என்பது பொருள். தமது இஷ்ட தெய்வமாகிய தேவிக்கு இந்தச் சிறப்பான அடைமொழியைச் சூட்டுகிறார் ஆசிரியர். மேலும் இவர் இந்நூலில் கையாளும் கவிதையின் சந்தம் ஆர்யா எனப்படும் விருத்தமாகும். ஸௌபாக்யாம் என்ற சொல்லின் மூலம் தாம் தேவியை ஸௌபாக்ய வித்தையின் மூலம் வழிபட்டதையும் உணர்த்துகிறார் கவி.

या शैशवात् प्रभृति नः
सङ्कटबहुलेषु संशयपदेषु ।
अविदितमथवा विदितं
पातात् पाति स्म गन्तुमिह गम्यम् ॥ २ ॥

2. யா சைசவாத் ப்ரப்ருதி ந:
ஸங்கடபஹுலேஷு ஸம்சயபதேஷு |
அவிதிதமதவா விதிதம்
பாதாத் பாதிஸ்ம கந்துமிஹ கம்யம் ||

2. மதலைப் பருவ முதலாய் அறிந்து
மறியா மலுமிடர் படுசமு சயந்த
னினின்றும் விழலி னின்றும்
எம்மைக் காத்தா யிங்குறும் பொருட்டே

'குழந்தைப் பருவமுதல் எனக்குத் தெரிந்தும் தெரியாமலும் பலவகை இன்னல்களிலிருந்தும், மனதை வதைக்கும் ஐயங்களிலிருந்தும், நான் இடறிவிழும் பொழுதிலும் என்னைக் கைதூக்கிக் காத்தது இந்தத் திரிபுரசுந்தரிதான்; அதுவும் நான் இங்கே எனது குறிக்கோளை அடையும் பொருட்டு வந்து சேருவதற்காகவே காப்பாற்றினாள்' என்று கவி நன்றியுடன் அன்னையை நினைக்கிறார். அவர் 'இங்கே' என்று சொல்வது புதுச்சேரியையே. ஸ்ரீ அரவிந்தபிரானை வந்தடைந்து அவர் தம் பூரணயோகத்தைப் பயலுவதே கவியின், அதாவது கபாலி சாஸ்திரியாரின் முழுமுதல் லட்சியமாகும்.

मूर्तिमपश्यममूर्ते-
रपि यद् देव्याः पुरा शिलाशिल्पे ।
चेनन्त्यथ चेतयन्ती
कृपा हि सेति स्मरामि सुन्दर्याः ॥ ३ ॥

3. மூர்த்தி மபச்ய மமூர்த்தே
ரபி யத் தேவ்யா: புரா சிலாசில்பே



சேதந்த்யத சேதயந்தீ
க்ருபா ஹி ஸேதி ஸ்மராமி ஸுந்தர்யா:

3. அருவம் ஆயினும் அன்று தேவியின்
உருவினைக் கண்டேன் சிலையதனில்; உணர்வு
கொண்டெ னையுணர்த்தியதும்
சுந்தரி அவள்தன் அருளென போற்றிடுவேன்

'நாம ரூபங்களைக் கடந்தவள் பராசக்தி; எனினும் அந்த உருவங்கடந்த தேவியைச் சிலைவடிவத்தில் கண்டேன் நான். அந்தச் சிலையில் அவள் உயிர்ப்பதையும் எனது உயிருக்கு உணர்வூட்டியதையும் நான் அறிந்தேன், என்னே தேவியின் கருணை' என திரிபுரசுந்தரியை நினைந்துருகுகிறார் கவி.

சாஸ்திரியாரின் சொந்த ஊர் திருவொற்றியூர். திரிபுரசுந்தரி ஆலயத்தில் அம்மன் சந்நிதியில் நின்று தினமும் மந்திர ஜபம் செய்வது அவரது வழக்கம். அந்நாட்களில் அவருக்கு ஏற்பட்ட தெய்வீக அனுபவத்தை நினைவுகூர்ந்து அன்னையின் அருளைப் பாடுகிறார் அவர்.

अच्छलजीवनविधये
तुच्छमनोवासकच्छतो हृत्वा ।
विच्छन्दकनिजपदभू-
सेविनमेनं व्यधत्त या सदया ॥ ४ ॥

4. அச்சல ஜீவன விதயே
துச்ச மனோவாஸ கச்சதோ ஹ்ருத்வா |
விச்சந்தக நிஜபதபூ—
ஸேவினமேனம் வ்யதத்த யா ஸதயா ||

4. கரவின்றி வாழ்வதற் காயெனை மனமெனும்
சகதியினின்றேற் றியருளினாள்
என்னிச் சைபோக்கி அடிமை கொண்டாளே

'இந்த ஜீவன் அப்பழுக்கற்று தூய்மையுடன் வாழ வேண்டுமென்பதற்காக மனம் என்கிற சேற்றிலிருந்து இழுத்து விடுவித்து சொந்த இச்சை இல்லாமலே இச் சீவன் தனது மலரடி சேவை புரியுமாறு அருள் கூர்ந் தாள்.'

பலவிதமான எண்ணச் சுழல்களும் விருப்பு வெறுப்புகளும் கொண்ட மனதை சேற்றுக்கு ஒப்பிடு கிறார் கவி. உளைபோன்ற இந்த மனதின் போக்கிலே சென்றால் உன்னத நிலை அடைவது என்பது இயலாது. தனது பக்தன்பால் கருணைமிகுந்து தேவி அவனை மனதி லிருந்து விடுவித்து விட்டாள். மனம் கழன்று விட்ட தால் சொந்த இச்சையும் கழன்றுவிட்டது. இவ்வாறு தன் மலரடியை வந்தடைவதற்காகவே தேவி தம்மை தடுத்தாட்கொண்டதாக சாஸ்திரியார் கூறுகிறார்.

**जीवग्राहमुदग्रा**
**निजपदजाले निधाय मां यस्याः ।**
**जागर्ति स्वीकर्तुं**
**दृष्टिः कालेऽत्र तन्तुनाभनिभा ॥ ५ ॥**

5. ஜீவக்ராஹமுதக்ரா
நிஜபதஜாலே நிதாய மாம் யஸ்யா: |
ஜாகர்தி ஸ்வீகர்தும்
த்ருஷ்டி: காலேऽத்ர தந்துநாபநிபா ||

5. எனையு யிருடன் பற்றித்தன் மலரடி
வலையினில் வைத்துச் சிலந்திபோல்
எனையுட் கொளத்தரு ணம்பார்த்து விழித்திருப்பாள்

'என்னை உயிரோடு பிடித்துத் தனது மலரடியாகிய வலையில் சிக்க வைத்து எப்போது என்னை விழுங்கலாம் என்று தருணம் பார்த்து சிலந்திபோல் விழித்துக் காத் திருப்பாள்.'



சிலந்தியின் கண்ணில் இருக்கும் காந்தசக்தி மிகுந்த பார்வையால் பூச்சிகள் ஈர்க்கப்பட்டு அதன் வலையில் வந்து சிக்கிக்கொள்ளும். இப்படிச் சிக்கிய இரையை உடனே விழுங்காமல் வைத்திருந்து தனக்கு வேண்டும் பொழுது சரியான சமயத்தில் உண்டுவிடும் அது. இவ் வாறே தேவியின் காந்தசக்தி மிகுந்த பார்வை பட்ட பக்தன் அவளது அண்மை (ஸாமீப்யம்) யாகிய வலையில் ஈர்க்கப்படுவான். அந்த அண்மையை அடைந்த பக்தனை உரிய வேளை வந்ததும் தன்பால் முழுமையாக ஈர்த்துக் கொண்டு தன்னுடையவனாக இருந்தவனை தானாகவே மாற்றிவிடுகிறாள் அன்னை. இறைவனுடன் இரண்டறக் கலக்கும் இந்த சாயுஜ்ய பதவியையே சாஸ்திரியார் இவ் வாறு வர்ணிக்கிறார்.

**अविचिन्वन् देवपथं**
**यदयं नीतो यदृच्छयेव यया ।**
**जनमिममज्ञमवन्ती**
**विज्ञा सा त्रिपुरसुन्दरी विद्या ॥ ६ ॥**

6. அவிசின்வன் தேவபதம்
யதயம் நீதோ யத்ருச்சயேவ யயா |
ஜனமிம மக்ஞமவந்தீ
விக்ஞா ஸா த்ரிபுரஸுந்தரீ வித்யா ||

6. இறைவழி நினைத்திலேன்; தற்செயல் போலெனை
நடாத்தினள் அறிவிலி எனையே
ஆட்கொண்டாள் பேரறிவுத் திரிபுரசுந்தரியே

'ஆன்மீக வழியைப் பற்றி நான் எதுவும் நினைத் திராத பொழுதே தற்செயலாக நிகழ்வது போல் அக் ஞானியாகிய என்னை அவ்வழியில் நடத்திச் சென்றாள். திரிபுரசுந்தரி என்னும் வித்யையாகிய அனைத்துமறிந்த பேரறிவுருவான அன்னை இந்த எளியேனை காத்தருளி னாள்.'

தம்மை அறிவிலி என்றும் இறைவழி நாடவில்லை என்றும் சாஸ்திரியார் கூறிக்கொண்டாலும் உண்மையில் என்றைக்கு அவர் ஸ்ரீவித்யை என்னும் மந்திரத்தைத் தம்முள் ஏற்றுக்கொண்டாரோ அன்றே அவரது ஆன்மீகப் பயணம் துவங்கிவிட்டது. தற்செயல் என்று அவர் கூறினாலும் பராசக்தி ஏற்கெனவே திட்டமிட்டு அவரை வரித்துவிட்டாள் என்றே கூறவேண்டும்.

**दुर्गममन्तर्ध्वान्त-**
**प्राकारं विहसितेन भिन्दन्ती ।**
**मुखमण्डलभा यस्याः**
**कुरुते स्वच्छान्तरानिमानस्मान् ॥ ७ ॥**

7. துர்கமமந்தர்த்வாந்த-
ப்ராகாரம் விஹஸிதேன பிந்தந்தீ |
முகமண்டலபா யஸ்யா:
குருதே ஸ்வச்சாந்தரா னிமானஸ்மான் ||

7. உளமாம் இருட்கோட் டைதனை தன்நகை
ஒளியால் தகர்த்தி டுவாள வள்தன்
முகவொளி யெம்முள மாசினை யகற்றிடுமே.

'உள்ளத்தைச் சுற்றி தகர்க்கவொண்ணுதவாறு கோட்டைபோல் சூழ்ந்துள்ள இருளை தனது புன்னகையொன்றுலே தகர்த்திடுவாள்; அவளது முகமண்டலத்தின் சோபையோ நமது இதயம் முழுவதையும் தூய்மையாக்கி விடும்.'

மனிதன் தனது அறியாமையாகிய இருளால் தனக்கும் இறைவனுக்கும் இடையே ஒரு பெரிய மதிற்சுவரை உருவாக்கிவிடுகிறுன். தெய்வம் அருள்கூர்ந்து மகிழும் பொழுது அந்த மலர்ச்சியின் ஒளியால் இருள் அகன்ெறழிகிறது. இருள் விலகப் பெற்ற பக்தனுக்கு அந்தத் தெய்வத்தின் முகதரிசனம் கிட்டியதுமே அம்முகத்தின்



பேரொளியால் அவன் இதயம் முழுவதும் மாசுமறு வற்றுத் தூய்மையாகி விடுகிறது.

**अद्भुतगगनशरीरा-**
**मेकाक्षरनादसंयतसमीराम् ।**
**सकलान्तरनिर्णिमिषां**
**निस्तिमिरामन्तरे परां वन्दे ॥ ८ ॥**

8. அத்புத ககன சரீரா-
மேகாக்ஷரநாத ஸம்யத ஸமீராம் |
ஸகலாந்தர நிர்ணிமிஷாம்
நிஸ்திமிராமந்தரே பராம் வந்தே ||

8. ககனமே அற்புத சரீரமாய் ஓரெழுத்துச்
சுதியே பூரக ரேசகமா யிருளின்றி
அனைத்துளும் இமையா நின்ற
பரம்பொருள் தன்னையுள்ளத் திருத்திப்
போற்றிடுவேன்

'விரிந்து பரவிய அதிசய ஆகாயத்தையே உடலாய்க் கொண்ட பராசக்தியை, ஆதிநாதமாகிய அந்த ஓரெழுத்தையே, ஏகாக்ஷரத்தையே தனது சுவாசமாகக் கொண்டு சகல இதயங்களிலும் விழிப்புடன் இலங்கியொளிரும் தேவியை எனது இதயத்தின் ஆழத்திலே வாழ்த்தி வணங்குகிறேன்.'

வேதத்தில் ஓம் என்னும் ஒலியை ஏகாக்ஷரமாகக் கூறுவதுபோல் தந்திர சாஸ்திரத்தில் ஹ்ரீம் என்னும் ஒலியை ஏகாக்ஷரமாகக் கூறுவது மரபு. இந்த ஒலியே தேவியின் மூச்சுக்காற்ருக இருப்பதாகக் கூறுகிருர் சாஸ்திரியார். மேலும் அண்டத்தில் ஆகாசமே சரீரமாக இருக்கும் தேவி பிண்டத்தில் மனித இதயமாகிய தஹராகாசத்தில் குடியிருக்கிருள். ஹ்ரீம் என்னும் ஓரெழுத்து மந்திர ஒலியை மூச்சாகக்கொண்ட அவள் மனித இதயங்

களில் ஒளிக்கீற்றாய் இலங்கும் ஹ்ருல்லேகை மூலம் ஜீவனுடன் தொடர்பு கொண்டு என்றும் இமையாமல் காத்து வருகிறாள். பிரபஞ்சத்தில் பெரும் ஆகாயவெளியைப் போர்த்துக் கொண்டிருக்கும் பரம்பொருள் மனிதனின் சிறிய இதய ஆகாசத்தை, ஒரு கட்டை விரல் அளவே இடைவெளி கொண்ட இடத்தைத் தனது குடியிருப்பாகக் கொண்டுள்ளது.

மனிதனுள் குடியிருக்கும் ஆன்மாவை ‘அங்குஷ்ட மாத்ர: புருஷ:’ - கட்டை விரல் அளவே யுள்ள புருஷன் என்று உபநிஷதமும் ‘வித்யுல்லேகேவ பாஸ்வரா’- மின்னற்கீற்று போல் ஒளிருகிறது என்று வேதமும் கூறுவது கவனித்தற் பாலது.

**परितो मां विसरन्ती-**
**मूर्ध्वं मूर्ध्नोऽवतीर्य विलसन्तीम् ।**
**निध्यायन्नध्यात्मं**
**भासं पदयोः स्मरामि सुन्दर्याः ॥ ९ ॥**

9. பரிதோ மாம் விஸரந்தீ-
மூர்த்வம் மூர்த்னோऽவதீர்ய விலஸந்தீம் |
நித்யாயன் னத்யாத்மம்
பாஸம் பதயோ: ஸ்மராமி ஸுந்தர்யா: ||

9. என்னைச் சூழ்ந்து பரவி தலையி
னின்றிறங்கித் திளைக்கும் ஆன்மச் சோதியை
உன்னிச் சுந்தரிதன் பொன்னடி தொழுதிடுவேன்

‘என்னைச் சுற்றிலும் சூழ்ந்து கொண்டு வியாபித்தும் எனது தலைக்குமேல் உயரத்திலிருந்து வந்திறங்கியும் வினோதம் புரியும் ஆன்மீகப் பேரொளியைத் தியானித்தவாறே திரிபுரசுந்தரி தேவியின் பதமலர்களை எண்ணிப் போற்றுகிறேன்.’



சாஸ்திரியார் இங்கே தமது ஆன்மீக அனுபவத்தைக் கூறுகிறார். பக்தனின் உள்ளேயிருந்து ஜ்வாலை போல் மேலெழும்பும் ஆர்வக் குரலுக்கு விடையாக மேலிருந்து தெய்வத்தின் மறுமொழி ஒளி உருவிலோ ஒலி உருவிலோ அன்புணர்ச்சி, இன்பப்பெருக்கு போன்ற வகையிலோ சாதகனை, பக்தனை வந்தடைவது வழக்கம். இங்கே ஒளி உருவில் தமக்குக் கிடைத்த அனுபவத்தைக் கூறுகிறார் கவி.

**गुरुचरणैः सङ्क्रमितां**
**वर्णमयीमम्बिकामनुध्यायन् ।**
**गुरुवरसम्पदमलभे**
**यदहं सा त्रिपुरसुन्दरीकरुणा ॥ १० ॥**

10. குருசரணை: ஸங்க்ரமிதாம்
வர்ணமயீ மம்பிகா மனுத்யாயன் |
குருவர ஸம்பதமலபே
யதஹம் ஸா த்ரிபுரஸுந்தரீ கருணா ||

10. எந்தை வழிபெற்ற அட்சர வுருவாம்
எந்தாயை எண்ணி யெண்ணியே அருட்செல்
வமென ஆசான் பலரைப்
பெற்றதும் திரிபுர சுந்தரி யருளன்றோ

‘எனது தந்தையார் மூலமாக நான் பெற்ற மந்திர எழுத்துக்களே உருவாகிய அன்னையை இடையறாது எண்ணி வந்ததாலேயே உன்னதமான ஆசார்யபுருஷர்களைக் குருவாகப் பெறும் பேறு எனக்குக் கிட்டியது. திரிபுரசுந்தரி தேவியின் கருணையன்றோ இது!’

மந்திரமும் தெய்வமும் ஒன்றே; வேறல்ல என்பார்கள். ஆகவேதான் சாஸ்திரியார் அன்னையை எழுத்துருவானவள் என்கிறார். இவர் தமது தந்தை மூலமாக ஸ்ரீவித்யா மந்திர உபதேசம் பெற்றார். இம்மந்திரத்தை தேவியின் சந்நிதியில் ஜபம் செய்யும் வழக்கமுடைய

இவர் அவ்வாறு செய்து வந்தபொழுது கோவிலில் ஒரு நாள் வாஸிஷ்ட கணபதி முனிவரைச் சந்தித்தார். அவரைத் தமது குருவாகக் கொண்டார் சாஸ்திரியார். காவியகண்டகணபதி முனியின் மூலமாக இவர் ரமண மகரிஷியைக் கண்டார். அதன்பின் ஸ்ரீ அரவிந்தரைச் சந்தித்து இறுதியாக ஸ்ரீ அரவிந்த ஆசிரமத்திலேயே தங்கியிருந்து யோகம் புரிந்து வந்தார்.

இவ்வாறு படிப்படியாக மகான்களைச் சந்தித்ததைத் தமக்குக் கிடைத்த அரும் செல்வமாகக் கருதுகிறார் சாஸ்திரியார். இந்த அரும்பேற்றுக்கெல்லாம் காரணம் தாம் ஜபம் செய்த ஸ்ரீவித்யா மந்திரமும் அம்மந்திரத்தையே உருவாகக் கொண்ட மகாதிரிபுர சுந்தரியின் கருணையுமே ஆகும் என்கிறார் அவர்.

**क इति त्रिजगज्जननी-**
**मादिकलां भुवनशिल्पनिर्मातुः ।**
**कमलोद्भवस्य कान्ता-**
**मादौ विद्यारताः प्रभाषन्ते ॥ ११ ॥**

*11.* க இதி த்ரிஜகஜ்ஜனனீ
மாதிகலாம் புவனசில்பநிர்மாது: |
கமலோத்பவஸ்ய காந்தா-
மாதௌ வித்யாரதா: ப்ரபாஷந்தே ||

*11.* கவெனும் எழுத்தினை வித்யை வல்லுனர்
புவனச் சிற்பியின் முதற்படைப் பெனவும்
அவளே நான்முகன் நாயகி
புவன மூன்றிற்கும் தாயெனவும் சாற்றினரே

'ஸ்ரீவித்யா உபாசகர்கள் க என்கிற எழுத்தை உலகச் சிற்பியான பிரம்மாவின் முதல் கலைப்படைப்பு என்பர்; இந்தக் கலைப்படைப்பே கலைவாணியாகிய சரஸ்வதி தேவி; முவ்வுலகையும் இணைக்கும் தாய்'.



க என்கிற எழுத்து பிரம்மா, சரஸ்வதி இவர்களின் பீஜாக்ஷரமாகும். உலகை சிருஷ்டித்த பிரம்மாவின் தேவியாகையால் முவ்வுலகில் நிகழும் செயல்களுக்கெல்லாம் பொறுப்பேற்கும் முவ்வுலகத்தாய் அவளே என்கிறார் கவி.

இந்தப் பதினோராம் சுலோகம் முதல் இருபத்தைந்தாம் சுலோகம் வரை உள்ளவை மிகப் பிரதானமானவை. ஏனெனில் இந்தச் சுலோகங்கள் ஒவ்வொன்றின் முதல் எழுத்தும் ஸ்ரீவித்யா மந்திரத்தின் அட்சரங்களாகும். ஸ்ரீவித்யா மந்திரம் பதினைந்து எழுத்துக்கள் கொண்டது. எனவே இந்தப் பதினைந்து சுலோகங்களின் முதலெழுத்துக்களையும் சேர்த்தால் பஞ்சதசீ எனப்படும் ஸ்ரீவித்யா மந்திரமாக அமைந்திருப்பதைக் காணலாம்.

**ए मातरखिलबोधन-**
**दक्षे रक्षेति नः समाहूय ।**
**स्वात्मानमर्पयन्ति**
**प्राज्ञायै तन्त्रवेदिनो विबुधाः ॥ १२ ॥**

*12.* ஏ மாதரகில போதன
தக்ஷே ரக்ஷேதி ந: ஸமாஹூய |
ஸ்வாத்மானமர்பயந்தி
ப்ராக்ஞாயை தந்த்ரவேதினோ விபுதா: ||

*12.* ஏனம்மா, அகிலமும் தூண்டும் வல்லவ
ளன்றோநீ எமைக்கா வென்று வேண்டிக்
கூவினர் தந்திர வல்லுனர்
ஆவியனைத் தையும் ஈந்தன ரவட்கே

'ஓ, அம்மா! அனைத்தையும் உணரும் வல்லவளே, எங்களைக் காப்பாற்று! என்று இவ்வாறு அன்னையைக் கூவியழைத்து அந்தப் பேரறிவுத் தேவிக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொள்வர் தந்திர வல்லுனர்கள்.'

இந்த இரண்டாவது சுலோகம் ஏ என்னும் எழுத்திலிருந்து ஆரம்பமாகிறது. மந்திரத்தின் இரண்டாவது எழுத்து ஏ என்பதாகும்.

தந்திரம் என்ருல் செயல் ஆகும். தெய்வத்தைக் கூவியழைப்பதும் தன்னைச் சமர்ப்பணம் செய்துகொள்வதுமே செயல்களுக்கெல்லாம் உன்னதமான செயல்.

**ईश्वरि मायिकमखिलं**
**प्रावरणं चक्षुषोऽपहर मातः ।**
**येनामायिकमखिलं**
**प्रेक्षेय तवैति याचते विद्वान् ॥ १३ ॥**

13. ஈச்வரி மாயிகமகிலம்
ப்ராவரணம் சக்ஷுஷோபஹர மாத: |
யேனுமாயிகமகிலம்
ப்ரேக்ஷேய தவேதி யாசதே வித்வான் ||

13. ஈசுவரி, தாயே, என்நயன மருள்தனை
ஆசுநீக்கி மருளகன்றே யுனைக்காண வருளென்றே
யாசிப்பார் நன்கறிந்த நல்லோர் தானே.

'பேரிறைவி, அன்னையே, எனது கண்களை மறைத்துள்ள மாயத்திரையை விலக்குவாய்; எவ்வித மருட்சியுமில்லாமல் உன்னை முழுவதுமாய்க் காண்பதற்கு அருள்வாய் என்று யாசிப்பார் அறிவு படைத்த புலவர்.'

உலகம் மாயை அல்ல; தெய்வமும் எட்ட முடியாத சக்தி அல்ல. மனிதனின் அறியாமையால் அவனுடைய கண்களை இருட்போர்வை மூடி பார்க்க வேண்டிய சத்திய வஸ்துவைப் பார்க்க வொட்டாமல் தடுத்து விடுகிறது. தெய்வத்தின் அருள் மூலம் தான் இந்தத் திரையை விலக்க முடியும் என்றுணர்ந்த ஞானிகள் அந்த அருளை வேண்டித் தவிக்கின்றனர்.



**ललिते भगवति भवती-**
**मुपगच्छामस्तदत्र कुरु दयितम् ।**
**अन्तस्सन्तमसं नो**
**हरेति देवीमुपासते विज्ञाः ॥ १४ ॥**

14. லலிதே பகவதி பவதீ
முபகச்சாமஸ் ததத்ர குரு தயிதம் |
அந்தஸ் ஸந்தமஸம் நோ
ஹரேதி தேவீமுபாஸதே விக்ஞா: ||

14. லலிதே, பகவதி யுனையே அண்டினேம்
எளியேமை உனக்குகந்த வராக்கி
உள்ளிருள் நீக்கென்பர் அறிஞர் அவரன்றே

'அன்னையே, லலிதாதேவி, நாங்கள் உன்பால், ஈர்க்கப்பட்டு உனக்கருகே வந்துள்ளோம்; எங்களை உனக்குப் பிரியமானவர்களாக, உனக்கு வேண்டியவர்களாக ஆக்கிக் கொள்; எங்கள் உள்ளங்களில் குடிகொண்டிருக்கும் இருளை அகற்று என உபாசிப்பது, அறிஞர்களுக்கு இயல்பு.'

உபாசித்தல் என்ருலே தெய்வத்தின் அருகே இருத்தல் என்பது பொருள். நெருக்கமானவர்களிடம் அன்பை வேண்டுவது இயல்பே யன்றே!

**ह्रीमिति मातुस्त्रिजगत्-**
**सङ्कोचविकासतन्त्रदीक्षायाः ।**
**अक्षरमेकं ध्यायन्**
**जगदज्ञानस्य जयति ना जेता ॥ १५ ॥**

15. ஹ்ரீமிதி மாதுஸ் த்ரிஜகத்-
ஸங்கோச விகாஸ தந்த்ர தீக்ஷாயா: |
அக்ஷரமேகம் த்யாயன்
ஜகதக்ஞானஸ்ய ஜயதி நா ஜேதா ||

15. ஹ்ரீமெனும் எழுத்தது முவ்வுலகை மறித்தும்
விரித்தும் செயலுற முனைந்த அம்மைக்
குரித்த எழுத்தா மதனை
ஸ்மரித்த நரனுலகை யோர்ந்து வெல்லுவனே

'மூன்று உலகங்களையும் சுருட்டியும் பின்பு விரித்தும் மீண்டும் சுருட்டியும் விரித்தும் செயல்படுவதே அன்னையின் இடையறா லீலையாகும். இந்த அன்னைக்கு உரிய ஹ்ரீம் என்னும் ஏகாட்சரத்தை தியானித்த மனிதன் உலக சம்பந்தமான உண்மைகளையெல்லாம் அறிந்து வெற்றி பெறுகிறான்.'

ஸ்ரீவித்யா மந்திரத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்துள்ளனர். இவற்றை மூன்று கூடங்கள் என்றழைப்பார்கள். கூடம் என்றால் சிகரம், உச்சி அல்லது முடி எனலாம். இந்த ஒவ்வொரு கூடமும் ஹ்ரீம் என்கிற அட்சரத்தைக் கொண்டு முடியும். இந்த சுலோகத்தின் ஆரம்ப எழுத்தான ஹ்ரீம் எனும் அட்சரம் மந்திரத்தின் ஒரு பகுதியான முதற்கூடம் முடிவடைந்ததைக் குறிக்கும்.

ஸ்ரீவித்யா மந்திரமே தேவியின் சொருபம் என்பர். இம்மந்திரத்தை தேவியின் உடலாய்க் கொள்வதால் மந்திரத்தின் மூன்று கூடங்களும் அதாவது, பகுதிகளும் தேவியின் உடலின் ஒவ்வொரு பகுதியையும் குறிக்குமென்பர். இந்த முதலாவது கூடம் தேவியின் முகமலர் ஆகும். இந்தப் பகுதிக்குப் பெயர் வாக்பவ கூடம் என்பதாகும். இந்த முதற் பகுதியை நன்கு ஓதியுணர்ந்தவன் தான் வாழும் இந்தப் பூமியைப் பற்றிய எல்லா உண்மைகளையும் அறியத் தொடங்குகிறான். இந்த உலகம் தெய்வத்தின் விரிவாக்கப்பட்ட ஒரு பகுதியே, தெய்வத்தின் உடல் போன்றதே இவ்வுலகம் என்னும் உண்மையை உணரத் தொடங்குகிறான். இது நாள் வரை உலகைப் பற்றிய அவனுக்கு இருந்த அஞ்ஞானம் விலகிவிடுகிறது.



हसिताङ्कुरस्य गर्भे
विश्वोद्भवमूलसंमदं दधती ।
सर्वज्ञहृदयरमणी
कामाक्षी जयति परमवामाक्षी ॥ १६ ॥

16. ஹஸிதாங்குரஸ்ய கர்பே
விச்வோத்பவ மூலஸம்மதம் தததீ |
ஸர்வக்ஞ ஹ்ருதய ரமணீ
காமாக்ஷீ ஜயதி பரமவாமாக்ஷீ ||

16. ஹஸித முகிழின் கருவினி லண்டம்
பிறக்க மூலமாம் ஆனந்த மதனைச்
சுமக்கின்றாள் சர்வக்ஞன் இதயத்தே திளைக்கின்றாள்
பொலிக காமாட்சி பரமன்றன் பத்தினியே

'தனது இன்சிரிப்பின் துளிரின் ஆழத்தில், அதன் கருவில் இந்தப் பிரபஞ்சம் உருவாகக் காரணமான பேருவகையைச் சுமக்கின்றாள் தேவி. சர்வக்ஞனை ஈசுவரனின் இதயத்தில் இயங்கும் காமாட்சி, பரமனின் ஒரு பாகமாய் விளங்கி வெல்கின்றாள்.'

பிரபஞ்சம் உண்டானதற்கு மூல காரணம் ஆனந்தமாகும். பராசக்தியின் சிரிப்பிலே, அந்த மகிழ்ச்சியிலே மலர்ந்தது இந்த உலகம்.

'ஸோகாமயத, அவன் விரும்பினான்; இந்த உலகம் விரிந்தது, 'தசைக்ஷத, - அது பார்த்தது; பாருலகம் பிறந்தது என்று உபநிஷதம் வர்ணிக்கிறது. காமம் என்றால் விருப்பம். அக்ஷி என்றால் கண். இங்கு காமாக்ஷி என்கிற பெயரைப் பயன்படுத்துகிறார் கவி. தனது கண்ணிலே விருப்பத்தைத் தேக்கி வைத்திருக்கிறாள் தேவி. அவளது விருப்பமும் பார்வையும் உலகைத் தோற்றுவிக்க வல்லது. விருப்பதின் விளக்கமாவது சிரிப்பு. எனவே தான் சிரிப்பின் கருவில் உலகம் தோன்றக் காரணமான ஆனந்தத்தைச் சுமக்கிறாள் என்கிறார் சாஸ்திரியார்.

सङ्करमक्षममाणा
धर्माणां सर्वलोकहितकामा ।
सारांशमुद्धरन्ती
सर्वस्माज्जयति सर्वभूतसमा ॥ १७ ॥

17. ஸங்கர மக்ஷமமாணு
தர்மாணும் ஸர்வலோகஹிதகாமா |
ஸாராம்ச முத்தரந்தீ
ஸர்வஸ்மாத் ஜயதி ஸர்வபூதஸமா ||

17. ஸர்வலோக நலனே விழைவாள் புவியில்
தர்மங்கள் குழம்பிடப் பொருள் அனைத்தின்
உள்ளுறை வண்மைக் கேற்றம்
தந்தே எல்லார்க்கும் சமமானுள் வாழி

'அனைத்துலக நலனையும் விரும்புகிறவளாகையால் தர்மங்கள், அதாவது சமயங்கள் ஒன்றுக்கொன்று மோதிக் குழப்பமடைவதை அன்னை பொறுக்கமாட்டாள். அனைத்தின் சாரத்தையும் ஏற்று அவையாவும் வளர வகை செய்வாள். சகல உயிர்க்கும் சமமாய் அன்பு செய்யும் அன்னை வாழ்க!'

பராசக்தி உலகிற்கெல்லாம் அன்னையாகையால் ஒவ்வோருவரையும் அவரவர் இயல்புக்கேற்றபடி அவரவர் மதவழிப்படியே வளர வகை செய்கின்ருள்.

कमलभुवो भवकार्ये
कमलाक्षस्यापि रक्षणे जगताम् ।
विलयेऽप्युभयोर्धात्री
कामकला जयति सर्वदेवकला ॥ १८ ॥

18. கமலபுவோ பவகார்யே
கமலாக்ஷஸ்யாபி ரக்ஷணே ஜகதாம் |



விலயேSப் யுபயோர் தாத்ரீ
காமகலா ஜயதி ஸர்வதேவகலா ||

18. கமலத் தோன்றலின் படைப்புத் தொழிலையும்
கமலக் கண்ணன் காப்புத் தொழிலையும்
பிரளய முறுங்கால் இருவர் சுமையும்
ஏற்கும் தேவி! வேட்பின் தளிரே,
தேவர்க் கெல்லாம் உனதோர்
அம்சம் தந்தாய் வாழிநீ வாழி

'படைப்புத் தொழிலில் பிரம்மாவிற்கும் காப்புத் தொழிலில் திருமாலிற்கும் கைகொடுக்கும் தேவி, பிரளய காலத்தில் இருவரையுமே தன்னுள் தாங்கும் தாய் நீ. தேவர்களிடமெல்லாம் ஒவ்வொரு அங்கமாக விளங்கும் காமகலை-விருப்பின் இழை நீ வெற்றியோடு திகழ்கின்ருய்.'

முதன் முதலாய்த் துளிர்த்த விருப்பத்தினை உடையவள் தேவி. பிரபஞ்சம் உண்டாக வேண்டும் என்ற விருப்பம் அது. பிரம்மாவின் மூலம் சிருஷ்டியையும் விஷ்ணுவின் மூலம் போஷணையையும் நடத்துவது அன்னையே. இதற்கான அன்னையின் செயல் திறனை தமக்குள் ஓர் அங்கமாகப் பெற்றவர்கள் அந்தத் தேவர்கள்.

हरहृदयपीठनिष्ठा
शिवपदसाम्राज्यसिद्धिभूयिष्ठा ।
भुवनत्रयनाथगुप्त-
श्रीविद्याप्रथनलासिनी जयति ॥ १९ ॥

19. ஹரஹ்ருதய பீட நிஷ்டா
சிவபத ஸாம்ராஜ்ய ஸித்தி பூயிஷ்டா |
புவனத்ரய நாதகுப்த
ஸ்ரீவித்யா ப்ரதன லாஸினீ ஜயதி ||

19. ஹரனிதய பீடந்தனில் நிலைகொண்டாள் அவன்றன்
பெருநிலைச் சித்திகள் செறியப் பெற்ருள்
திரிபுவன நாதன் பேணும்
ஸ்ரீவித்யை வழிதன் பொலிவினைப் பரப்பிடுவாள்

'சிவனின் இதயபீடத்தில் நிலையாய் இருந்து கொலு விருப்பாள். சிவ பத சாம்ராஜ்யத்தின் சித்தி களைப் பூரணமாய்ப் பெற்றவள். மூவ்வுலக ஈசன் பேணிப் பாதுகாக்கும் ஸ்ரீவித்யை மூலமாய்த் தன் மகிமைகளை வெளிப்படுத்துவாள்.'

பரமசிவனிடமிருந்து ஒரு கணமும் பிரியாதவள் பராசக்தி. சிவபதம் என்னும் உன்னத நிலைக்குரிய சித்தி களைத் தனக்குள் பூரணமாகப் பெற்றவள். அந்தப் பரம சிவனே அன்னையின் மந்திரமாகிய ஸ்ரீவித்யையை மிக ரகசியமாய், புனிதமாய் பேணிப் பாதுகாக்கின்ருர். அதனுடைய மகிமை குன்ருதவாறு காக்கிருர். ஏனெ னில் அந்த மகா மந்திரத்தின் மூலமாகவே அன்னையின் மகிமை உலகிற்கு, சாதகனுக்கு வெளிப்படுகின்றது.

**लज्जाबीजाद् विश्वं**
**विततं निर्लज्जमम्बरे दधती ।**
**कामकला ब्रह्माण्डे**
**पिण्डाण्डे जयति सैव नित्यकला ॥ २० ॥**

20. லஜ்ஜாபீஜாத் விச்வம்
விததம் நிர்லஜ்ஜ மம்பரே தததீ |
காமகலா ப்ரஹ்மாண்டே
பிண்டாண்டே ஜயதி ஸைவ நித்யகலா ||

20. லஜ்ஜா பீஜமெனும் வித்தெழுத் துதித்த
விசுவம் தன்னை விசும்பினி லன்னை
வகிப்பது தெளிவே; அண்டத்தில் காமகலை



பிண்டத்தில் நித்திய கலையென
பொலிவொடு விளங்கிடு பரவொளி யவளே

'ஹ்ரீம் என்னும் பீஜாக்ஷரத்தின் மூலமாக ஆகாயப் பெருவெளியில் இந்த பிரபஞ்சத்தை அன்னை வெளிப்படையாய்த் தாங்குகின்ருள். அண்டத்திலே காம கலையாகவும் பிண்டத்தில் நித்திய கலையாகவும் விளங்கு வதும் இந்த அன்னையே தான்.'

ஹ்ரீம் எனும் ஒலியை லஜ்ஜா பீஜம் என்பர். சம்ஸ்கிருதத்தில் லஜ்ஜா என்ருல் நாணம். ஹ்ரீ என்ற சொல்லும் நாணம் என்ற பொருளைக் குறிக்கின்றது. எனவே இம்மந்திர ஒலியை லஜ்ஜா பீஜம் என்கின்றனர்.

நாணம் என்னும் உணர்ச்சி ஒரு சுருக்கத்தை, ஒடுக் கத்தைக் காட்டுகின்றது. ஒரு பீஜத்தில், ஒரு விதையில் அதனுடைய படைப்பாற்றல் நாணிச் சுருங்குவது போல் ஒடுங்கியிருக்கிறது. விதையின் வாயிலாக எழும் விருட்ச மோ சுருங்காமலும் ஒடுங்காமலும் வெளிப்படையாக விரிந்தோங்குகிறது. இவ்வாறே ஹ்ரீம் என்னும் மந்திர ஒலியிலிருந்து உண்டாகிய பிரபஞ்சம் அந்த மந்திரம் போல் மறைந்து ரகசியமாக இல்லாமல் கண்களுக்குப் புலனுகும் வண்ணம் தெள்ளன விளங்குகிறது என்கிருர் கவி.

பிரம்மாண்டத்தில், அதாவது அண்டவெளியில் விருப்பின் இழையாக, காமகலையாக விளங்குகிருள் அன்னை. உலகம் தோன்ற வேண்டும் என்கிற அவளு டைய விருப்பத்தின் காரணமாகவே இவ்வுலகம் தோன்றி இயங்கி வருகின்றது. உலகின் ஒரு பகுதியாகிய மனிதனிலும் அந்த அன்னையின் ஒரு பகுதியே நித்திய கலையாக விளங்குகிறது. இந்தத் தெய்வீக, அமர சக்தி தான் மனிதனுக்கு வாழ்க்கையில் ஈடுபாட்டை அளிக் கின்றது.

ह्रीमिति हृदयाभ्युदयां
रेखां बृहदूर्ध्वमूलकामकलाम् ।
हृल्लेखां भुवनेश्वर-
सम्पदमेकाग्रसंमदां चिनुमः ॥ २१ ॥

21. ஹ்ரீமிதி ஹ்ருதாப்யுதயாம்
ரேகாம் ப்ருஹதூர்த்வ மூலகாமகலாம் |
ஹ்ருல்லேகாம் புவனேச்வர
ஸம்பத மேகாக்ரஸம்மதாம் சினும: ||

21. ஹ்ரீமென் றிதயத் துதிக்கும் கதிரினை
வியனில் வேர்கொள் காமகலை ஹ்ருல்லேகை
தனையே புவனேசன் றன்னுவ கைச்செறி
வினையகத் திற்கொண் டேவ ளருவமே

'புவனங்களின் அதிபதியாம் பரமேசுவரனின் செல்வமாகிய ஆனந்தச் செறிவை, மனிதனின் இதயத்தினின்றும் எழும் ஒளிக்கதிராம் ஹ்ருல்லேகையை, ஹ்ரீமை, மேலே பெருவெளியில் தனது வேரை ஊன்றியிருக்கும் காமகலையை நம்முள்ளே சேர்த்துத் திரட்டி வளருவோம்.

முதன் முதலாக உண்டாகிய ஆதி இச்சை மேலே பெருவெளியினின்றும் தோன்றியது. பிருஹத் சத்யம்—பேருண்மை அது. தனது வேரை ஆகாயத்தில் ஊன்றிக் கொண்டு கீழ்நோக்கித் தன் கிளைகளைப் பரப்பிக்கொண்டு உலகமாய் விரிந்தது அது. இந்த உலகினின்று அதற்கு மறுமொழியாய் மனித இதயத்தினின்று தெய்வத்தை அவாவி ஒளிக்கதிர் எழும்பி வளருகிறது. இதுவே ஹ்ருல்லேகை எனப்படுவது.

இந்த சுலோகத்துடன் மந்திரத்தின் மத்திய பாகம் உருவாகிறது.



समये समया परमं
साक्षादुपजीव्यमध्वनीक्षयते ।
चरिते तु कुलाचारे
प्रथयति चित्राणि परमशक्तिकला ॥ २२ ॥

22. ஸமயே ஸமயா பரமம்
ஸாக்ஷா துபஜீவ்ய மத்வனீக்ஷயதே |
சரிதே து குலாசாரே
ப்ரதயதி சித்ராணி பரம சக்திகலா ||

22. ஸமயந் தனிலே பரச்சுவை நுகரும்
வழிதனைக் காட்டுவாள் சிவனின் நல்லிணை
யானவள் குலாசார மென்னும்
பயிற்சிதன்னில் அற்புதம் பலவும் புரிந்திடுவாள்

'ஈசுவரனுடன் சமானமாக இணைந்திருக்கும் பராசக்தி உரிய தருணத்தில் சாதகனுக்குப் பரமானுபவத்தை, ஆன்மாவுடன் ஒன்றும் பேருணர்வை, அடைய வழிகாட்டுவாள். குலாசாரம் என்னும் சாதனுமார்க்கத்தைக் கடைப்பிடிக்கும் பொழுது பலவகையான அற்புத லீலைகளைப் புரிவாள்.'

தந்திர சாஸ்திரத்தில் இருவகையான சாதனு மார்க்கங்கள் கூறப்பட்டுள்ளன. குலாசாரம், சமயாசாரம் என்பவை அவை. குலாசாரத்தில் புறவழிபாடு பிரதானமானது. சாதகன் பலவகையான புறச்சடங்குகள் மூலம் தனது உள்ளத்தைத் தூய்மையாக்கிக் கொள்கிருன். மனிதனைக் கீழே தள்ளக் கூடியவை எவையோ அவைகளையே பிரயோகித்துத் தனது ஆன்மாவை விருப்பு வெறுப்புகளினின்றும் விடுவித்துக் கொண்டு தெய்வத்தை நோக்கி உயர்கிருன். இதில் சாதகனின் சொந்த முயற்சியும் உழைப்பும் மிகுதியாக வேண்டப்படுகிறது. தனது கடுமையான தவத்தின் மூலம் தன் மூலாதாரத்தில் சுருண்டு உறங்கிக் கொண்டிருக்கும்

குண்டலினி சக்தியை எழுப்பி மேலேற்றி தன் தலையிலே இருக்கும் ஆயிரம் மடல்கள் கொண்ட தாமரையாகிய சகஸ்ரார மையத்திற்குக் கொண்டு வந்து அங்கே இருக்கும் சிவனுடன் இந்தக் குண்டலினி சக்தி சேருமாறு செய்கிறான். இந்த அரிய நிகழ்ச்சி நடைபெறுகையில் பராசக்தியின் அம்சமான குண்டலினி சக்தி சாதகனுக்குப் பல அற்புதமான சித்திகளை அளிப்பாள். சாதகன் அந்தச் சித்திகளிலேயே மயங்கி நின்று சாதனையைத் தொடராமல் தேங்கி நின்றுவிடும் அபாயமும் இதில் உண்டு.

மற்றொரு மார்க்கமான ஸமயாசாரத்தில் புறச் சடங்குகளுக்கு முக்கியத்துவம் கொடாமல் சாதகனின் உண்முக சாதனையையே வலியுறுத்தப்படுகிறது. உண்முகமான பூஜையின் மூலம் சாதகன் தன்னை தெய்வ சக்தியிடம் முழுவதுமாய் ஒப்படைத்து விடுகிறான். பயனைப் பற்றிய கவலையை விடுத்து அன்னைபால் பூரணமாகச் சார்ந்து விடுகிறான். உரிய தருணம் வந்தவுடன் அன்னை சாதகனுக்குத் தன்னை வெளிப்படுத்துவாள். இந்த சமயத்திற்காகவே சாதகன் பொறுமையுடன் காத்திருப்பான்.

**कन्दर्पदर्पजीवन-**
**सौन्दर्यबलाऽन्तरङ्गशक्तिकला ।**
**पदजलजातप्रभवा**
**प्रभवति मर्त्येऽमरत्वमाधातुम् ॥ २३ ॥**

23. கந்தர்ப தர்பஜீவன
ஸௌந்தர்யபலா ऽந்தரங்க சக்தி கலா |
பதஜலஜாதப்ரபவா
ப்ரபவதி மர்த்யே ऽமரத்வமாதாதும் ||

23. கவினே வலிவாய்க் காமனை மீட்ட
அந்தரங்க சக்திகலை மூலத்தா மரையில்



பிறக்கு மவளே நரனை
அமரன் ஆக்கும் ஆற்றலு முடையாள்

'மூலாதாரத்தினின்றும் உதித்தெழும் சக்திகலையாம் தேவி தனது பேரெழில் மூலமாக மன்மதனின் மானத்தைக் காத்து அவனைச் சாவினின்று மீட்டாள். மனிதனிலும் அமரத்தன்மையைக் கொண்டுவர வல்ல அன்னை அவளே.'

மூலாதாரத்தினின்றும் எழும் குண்டலினி சக்தி அன்னையின் அங்கமேதான். அந்தச் சக்தி மேலே சகஸ்ஸாரத்தில் சிவனுடன் சேரச் செல்லும்பொழுது சாதகனின் உடல் முழுவதும் அமுதமயமான இன்பச் சக்தி பெருக்கெடுக்கும். இந்தச் சக்தியின் வைபவம் சாதகனை அமரன் ஆக்கிவிடும் ஆற்றலுடையது.

மன்மதனை சிவன் எரித்துச் சாம்பலாக்கியபோது பராசக்தியின் அம்சமான குண்டலினி சக்தியே அவனைப் பிழைக்க வைத்ததென்பர்.

மனிதன் சிற்றின்பத்தை முழுவதுமாய் வென்று சாம்பலாக்கினால் அன்னையின் சக்தி அவனுக்கு உண்மையான இன்பத்தையும் தெய்வீக அன்பையும் அளித்து மரணம் என்னும் சாபத்திலிருந்து அவனை மீட்டு விடுவாள் என்பது கருத்து.

**लभ्या वाणी विष्णो-**
**र्दयिताऽपि चरा स्थिरा च यत्नेन ।**
**परमार्थबद्धदीक्षैः**
**परस्य शक्तिस्तु तत्प्रसादेन ॥ २४ ॥**

24. லப்யா வாணீ விஷ்ணோர்
தயிதாபி சரா ஸ்திரா ச யத்னேன |
பரமார்த்த பத்த தீக்ஷை:
பரஸ்ய சக்திஸ்து தத்ப்ரஸாதேன ||

24. லலிதையை வழிபடு வழிதனில் வாணியும்
அருகினில் வருவாள் முயன்றிடின் சஞ்சலத்
திருமக ளவளும் நிலையாய் நின்றிடுவாள்
பரநிலை பற்றியோர் தமக்கோ
பரநுகர் வளிப்பது அவளருள் தானே

'கலைவாணியை அடைந்து விடலாம்; சஞ்சல இயல்புடைய திருமகளையும்கூட முயற்சி செய்தால் அடையலாம். உன்னதப் பெருநிலையை அடையவேண்டுவோர், அவள் அருள் ஒன்றாலேயே அதை அடைவர்.'

திரிபுரசுந்தரியை உபாசிப்பவர்கள் அறிவையும் திருமகள் கடாட்சத்தையும் பெற்று விடுவது இயல்பு தான். எனினும் ஆன்மீகப் பேரனுபவத்திலேயே நாட்ட முடையவர்கள் பராசக்தியின் நேரிடையான அருளினாலேயே அதை அடைவார்கள்.

ह्रीङ्कारत्रितयशिर-
स्त्रिकूटमुखमध्यपादवर्णमयीम् ।
ज्ञानत्रयशक्तिगर्भा
निर्भरसौभाग्यसुन्दरीं वन्दे ॥ २५ ॥

25. ஹ்ரீங்கார த்ரிதயசிர
ஸ்த்ரிகூட முகமத்ய பாதவர்ணமயீம் |
ஞானத்ரய சக்திகர்பாம்
நிர்பர ஸௌபாக்ய ஸுந்தரீம் வந்தே ||

25. ஹ்ரீங்கார மூன்றை முடியிற் கொண்ட
முக்கூடத் துறையும் அக்கர வடிவாய்
அவையே முகம்இடை பதமெனக் கொண்ட
நற்புகலே, சௌபாக்ய சுந்தரி போற்றி!

'ஹ்ரீங்காரங்களை முடிவாகக் கொண்ட மூன்று கூடங்களாக அமைந்திருக்கும் மந்திர எழுத்துக்களின்



ஞானசக்தியைத் தன் கருவினில் தரிக்கும் தேவியை, அந்த மூன்று பகுதிகளையே தனது முகம், இடை, பாதம் என்ற மூன்று அங்கங்களாகக் கொண்ட சௌபாக்கிய சுந்தரியை வணங்குகிறேன்.'

இந்த சுலோகத்தின் முதல் எழுத்துடன் பஞ்சதசீ மந்திரம் நிறைவடைகிறது.

ஸ்ரீ வித்யா மந்திரமாவது—

कएईलह्रीं हसकहलह्रीं सकलह्रीम्

க ஏ ஈ ல ஹ்ரீம் (முதற்கூடம்-முகம்)
ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் (இரண்டாம் கூடம் இடை)
ஸ க ல ஹ்ரீம் (மூன்றும் கூடம்-பாதம்)

சௌபாக்யவித்யா மந்திரமாவது—

ऐं कएईलह्रीं क्लीं हसकहलह्रीं सौः सकलह्रीं
ஐம் க ஏ ஈ ல ஹ்ரீம் க்லீம் ஹ ஸ க ஹ ல ஹ்ரீம்
ஸௌ: ஸ க ல ஹ்ரீம்.

இந்த மூன்று கூடங்களும் முறையே வழங்கும் ஞானத்தைப் பற்றி அடுத்து வரும் சுலோகங்கள் விளக்குகின்றன.

पञ्चदशाक्षरवपुषं
गात्रविभागेन पङ्क्तिशस्त्रितयीम् ।
वन्दे ललितां विद्यां
मुनिजनसाम्राज्यमौनगुरुदृष्टाम् ॥ २६ ॥

26. பஞ்சதசாக்ஷர வபுஷம்
காத்ரவிபாகேன பங்க்திசஸ் த்ரிதயீம் |
வந்தே லலிதாம் வித்யாம்
முனிஜனஸாம்ராஜ்ய மௌனகுரு த்ருஷ்டாம்

26. பதினைந் தெழுத்துருக் கொண்டாள் லலிதை
பகுதிகள் மூன்றாய் விளங்கினள் முறையே
முனிவர்க் கெல்லாம் மாமன்னன்
மௌனகுரு கண்ட வித்தை தனைப்பணிந்தேன்

'பதினைந்து எழுத்துக்களால் உடல் கொண்டு அவற்றில் தன் மூன்று பகுதிகள் முறையே விளங்க ரிஷிகளின் சாம்ராஜ்யத்திலே மகரிஷியாய் விளங்கும் மௌன குரு கண்ட வித்தையான லலிதா தேவியை வணங்குகிறேன்.'

பதினைந்து எழுத்துக்களுடன் மூன்று கூடங்களாக இருக்கும் இந்த மந்திரத்தின் ரிஷி தக்ஷிணாமூர்த்தியாவார். அவர் ரிஷிகளுக்கெல்லாம் மன்னன் போல் விளங்குபவர். மௌனமே அவரது உபதேசம். இந்த மந்திரத்தின் சந்தஸ் பங்க்தி எனப்படுவது. தேவதை-லலிதா திரிபுரசுந்தரி.

हाद्यां केचन काद्या-
मन्ये प्रणमन्ति मन्त्रवर्णमयीम् ।
पञ्चाक्षर्यामिव सा
सप्ताक्षर्यां च जयति नादकला ॥ २७ ॥

27. ஹாத்யாம் கேசன காத்யாம்
அன்யே ப்ரணமந்தி மந்த்ரவர்ணமயீம் |
பஞ்சாக்ஷர்யாமிவ ஸா
ஸப்தாக்ஷர்யாம் ச ஜயதி நாதகலா ||

27. மந்திர அக்கர வடிவுடை யன்னையை
தந்திர நல்லோர் இருவழி நாடினர்
ஒன்றது ஹாதி மற்றது காதி
பஞ்சாட் சரத்திற் போன்றவள்
சப்தாட் சரத்திலும் நாதகலை யாய்ப்பொலிவாள்.



'மந்திர அட்சர வடிவில் இலங்கும் அன்னையைச் சிலர் ஹாதி என்ற முறையிலும் வேறு சிலர் காதி என்னும் முறையிலும் வழிபடுவார்கள். ஐந்து எழுத்து மந்திரத்தில் எப்படி நாதகலையாக விளங்குகிறாளோ அதே போல் ஏழு எழுத்து மந்திரத்திலும் விளங்குகின்றாள் அன்னை.'

ஹ என்ற எழுத்தில் தொடங்கும் மந்திரத்தை ஹாதி என்றும் க என்னும் எழுத்தில் தொடங்கும் மந்திரத்தை காதி என்றும்-ஹாதி வித்யா, காதி வித்யா-கூறுவது தந்திர சாஸ்திர மரபு. இவ்விரண்டுமே சமமான சக்தியுடையவைதான் என்பது ஸ்ரீவித்யா உபாசகர்களின் கருத்து.

ஹாதி-ஹஸகலஹ்ரீம் ஹஸகஹலஹ்ரீம்
ஸகலஹ்ரீம்

हसकलह्रीं हसकहलह्रीं सकलह्रीम्

காதி-கஏஈலஹ்ரீம் ஹஸகஹலஹ்ரீம்
ஸகலஹ்ரீம்

முன்னது அகஸ்தியராலும் பின்னது காமனாலும் வழிபடப்பட்டது. முன்னதில் ஏழு எழுத்துக்களும் பின்னதில் ஐந்தும் உள்ளன. ஒரு முறை வந்த எழுத்து மறு முறைகளில் வருவதைக் கணக்கில் எடுத்துக்கொள்ளப் படவில்லை.

वाग्भवमस्तकमाया
जगदज्ञानान्तसिद्धये गेया ।
मुखपङ्कजाग्रकलया
वाणीसिद्धिं बुधस्य कलयति या ॥ २८ ॥

28. வாக்பவ மஸ்தக மாயா
ஜகதஞ்ஞானந்த ஸித்தயே கேயா |

முகபங்கஜாக்ர கலயா
வாணீஸித்திம் புதஸ்ய கலயதி யா ||

28. வாக்பவ முடியில் இலங்கிடு ஹ்ரீமை
பூதலஞ் சார்ந்த மடமை நீங்கிட
ஓதுவர் சான்றோர் வதனமூலம்
வாக்கினிற் றிண்மை அவர்க்கது நல்கும்

'முதல் கூடமாம் வாக்பவ கூடத்தின் முடிவில் உள்ள ஹ்ரீமை ஓதினுல் உலக சம்பந்தமாக உள்ள அறியாமை முழுவதும் விலகிவிடும். அன்னையின் முகமலராகிய இந்த முதற் பகுதியின் மூலம் சாதகன் பேச்சில் ஒரு தெளிவும் திண்மையும் பெறுவான்.'

இந்த வாக்பவகூடம் ஆதிவாக்கிலிருந்து உதித்தது. ஆகவே இது சாதகனுக்கு வாக்சித்தியை அளிக்கின்றது.

இந்த உலகம் கடவுளின் வெளிப்பாடு என்பதை அறியாமலிருப்பதே அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்தை முதலாவது ஹ்ரீம் நீக்கி உலகத் தோற்றத்தின் விளக்கத்தைத் தெள்ளெனக் காட்டும்.

जगदीश्वरविज्ञानो-
ल्लासनचुञ्चुं सदागमप्रणवम् ।
कामेशखण्डचूडा-
लङ्कारं नौति तन्त्रबिद् धन्यः ॥ २९ ॥

29. ஜகதீச்வரவிஞ்ஞானோல்
லாஸன சுஞ்சும் ஸதாகமப்ரணவம் |
காமேசகண்ட சூடா
லங்காரம் நௌதி தந்த்ரவித் தன்ய: ||

29. காமேசன் முடியணி யிரண்டாம் வித்தது
பாரையும் பரனையும் விளக்கிட வல்லது
ஈங்கதை யுணர்ந்தே போற்றுவர் பெரியோர்



'இவ்வுலகத்தையும் இதன் ஈசனையும் பற்றிய ஞானத்தைத் தெளிவாக்கும் இரண்டாவது ஹ்ரீம். காமேசனின் பகுதியின் முடியில் அணியாக விளங்கும் இந்த தாந்திரிகப்ரணவத்தை தந்திரமறிந்த புண்ணியர்கள் போற்றி வணங்குவர்.

இந்த மந்திரத்தின் இரண்டாம் பகுதி காமராஜ கண்டம் என்று கூறப்படுகிறது. சிருஷ்டிக்கு முன்பு உண்டாகிய விருப்பத்தை இது குறிக்கின்றது.

வேதாந்தத்தில் ஓம் என்னும் பிரணவத்திற்கு அளிக்கப்படும் முக்கியத்துவம் தந்திர சாஸ்திரத்தில் ஹ்ரீம் என்னும் ஒலிக்கு அளிக்கப்படுகிறது.

இந்த இரண்டாவது ஹ்ரீம் சாதகனுக்கு உலகத்தைப் பற்றிய தெளிவான ஞானத்தையும் ஈசுவரனைப் பற்றிய உண்மையையும் எடுத்துக் காட்டும்.

जीवेशसर्गसकल-
ज्ञाननिधानं पराङ्घ्रिजलजातम् ।
सर्वज्ञपदमुपास्ते
कूटत्रयमुकुटमायया मन्त्री ॥ ३० ॥

30. ஜீவேச ஸர்க ஸகல
ஞானநிதானம் பராங்க்ரி ஜலஜாதம் |
ஸர்வக்ஞ பதமுபாஸ்தே
கூடத்ரய முகுட மாயயா மந்த்ரீ ||

30. மும்முடி தனக்கும் முடிபாய் விளங்கிடும்
மூன்றும் ஹ்ரீமதை முறையே கொள்வோன்
மன்னுயிர் மாநிலம் மகேசன் மூன்றன்
கருத்தையு மொருங்கே தெளிந்தவ னுவான்
பரசக்திப் பதமல ரிந்தப்
பகுதிய றிந்தோனெல் லாமறிந்தோ னுகிடுவான்

'ஆன்மா, இறைவன், படைப்பு ஆகிய மூன்றினைப் பற்றிய சகல ஞானத்தையும் அளிக்கும் அன்னையின் பாதகமலமாகிய சர்வக்ஞநிலையாம் மூன்றும் ஹ்ரீமை மந்திர ஜபம் பெற்ற சாதகன் போற்றி வணங்குகிறான்.

மந்திரத்தின் மூன்றாவது கூடம்-பகுதி-அன்னையின் பாதமலராகக் கருதப்படுகிறது. இந்தக் கூடத்தின் ஹ்ரீமைப் பயின்றால் படைப்பைப் பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் கடவுளைப் பற்றியும் பூரணமான ஞானம் கிட்டும்.

गुरुजनगुणशतशोधितचित्तं
गुरुवरकरुणावीक्षितसिक्तम् ।
गुरुचरणाम्बुजनित्यभुजिष्यं
गुर्वी सिद्धिर्गच्छति शिष्यम् ॥ ३१ ॥

31. குருஜன குணசத சோதித சித்தம்
குருவர கருணா வீக்ஷித ஸிக்தம் |
குரு சரணாம்புஜ நித்ய புஜிஷ்யம்
குர்வீ ஸித்திர் கச்சதி சிஷ்யம் ||

31. ஆன்றோர் குணநல ஆயிரம் கொண்டு
ஆன்மத் தூய்மை அடைந்த பின்னர்
ஆசான் கடைவிழி அருளிற் குளித்து
அன்னார் பணிக்கே அடிமை யானால்
அரும்பெறும் சித்திகள் சீடனை அடையும்

'முதியோர்களின் நற்குணங்களையெல்லாம் அறிந்து பின்பற்றி அதனால் தனது ஆன்மாவைத் தூய்மைப் படுத்திக்கொண்டு தனது குருவின் அருட்பார்வையில் நனைந்து அவர்தம் மலரடிச் சேவைக்குத் தன்னை அர்ப்பித்துக்கொள்ளும் சீடனுக்கு சாதனா மார்க்கத்தில் ஒப்பற்ற சித்தி கிட்டும்.'



சாதனையில் வெற்றி பெறுவதற்கான முக்கிய விதியை இங்கே சாஸ்திரியார் கூறுகிறார். சாதகன் தனது வயதிற் பெரியோர்களிடமிருந்து நல்ல அம்சங்களையெல்லாம் பாடமாய்க் கற்றுக்கொண்டு தனது ஆன்மீக குருவிற்கு இடையறாத தொண்டு செய்து அவர்தம் அருளைப் பெறவேண்டும் என்று கூறுகிறார்.

मन्त्रगुरौ मनुशक्तिर्गुप्ता
रोहति फलति च जप्तर्युप्ता ।
पुस्तकमन्त्रैर्मस्तकभारं
निवहन्नन्धो वेद न सारम् ॥ ३२ ॥

32. மந்த்ரகுரௌ மனுசக்திர் குப்தா
ரோஹதி பலதி ச ஜப்தர்யுப்தா |
புஸ்தகமந்த்ரைர் மஸ்தக பாரம்
நிவஹன்னந்தோ வேத ந ஸாரம் ||

32. மந்திரம் விதைத்திடும் குருவின் கண்ணம்-
மந்திரச் சக்தி பொதிந்து கிடக்கும்
முறையே பயிலும் சீடன் பாலது
முளைத்து வளர்ந்து விளைவது திண்ணம்
புத்தக மந்திரம் மத்தக பாரம்
அந்தகன் விழியென பயனில தொழியும்

'மந்திர சித்தி பெற்ற குருவிடம் அம்மந்திரச் சக்தி அடங்கியிருக்கும். சீடனுக்கு அவர் அதை அளித்து அவனும் முறையே பயின்றால் குருவினால் விதைக்கப்பட்ட அம்மந்திரம் முளைவிட்டுச் செழித்து வளர்ந்து பயனை அளிக்கும். அதுவன்றி புத்தக மூலமாய்ப் படிக்கும் மந்திரம் வெறும் தலைப்பாரத்தையே உண்டு பண்ணும். அதைக் குருடன் போல் சுமப்பவன் எந்த தத்துவத்தையும் அறியமாட்டான்.'

சாதனையில் குருவின் முக்கியத்துவத்தை சாஸ்திரியார் இங்கே வலியுறுத்துகிறார். மந்திரத்தில் சித்தி பெற்ற மகாபுருஷர்தான் தகுந்த குருவாவார். ஏனெனில் அந்த மந்திரத்தின் சக்தி அவருள் நிறைந்திருக்கும். அவர் தமது சீடனுக்கு அதை அளிக்கும்போது தனது ஆன்மீகச் சக்தியையும் அவனுள் செலுத்துகிறார். இதனை நன்கு வாங்கிக்கொண்ட சீடன் பக்தியுடன் அதை ஜபம் செய்து வந்தால் அவன் நல்ல பலனை அடைவது திண்ணம். அதுவன்றி புத்தகத்தில் மந்திரத்தைப் படித்துவிட்டு சாதனை செய்யத் தொடங்கினால் எவ்வித பயனும் இருக்காது. சக்தி வாய்ந்த ஒருவர் உணர்வுடன் அளிக்கும் மந்திரம்தான் சீடனிடம் உயிர்த்து உரிய பயனைத் தரும்.

ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ் 156 அவ்வை ஷண்முகம் சாலை
(Lloyds Road) சென்னை 600086